திருவிந்திரபுரி 

# அநுமான்

## பிள்ளைத்தமிழ்

வித்வான்
கி. கோபாலகிருஷ்ண ஐயர்

mano's

ஸ்ரீ

# திருவிந்திரபுரி அநுமான் பிள்ளைத்தமிழ்

இயற்றியவர்
வித்வான் கி. கோபாலகிருஷ்ண ஐயர்

உரையாசிரியர்
பேராசிரியர் வித்வான் டாக்டர்
ந. சுப்ரமண்யன் எம்.ஏ.,பிஎச்.டி.

என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்
உடுமலைப்பேட்டை-642 128

முதற்பதிப்பு 1996

விலை ரூ. 15/=

அச்சிட்டோர் :

அஜந்தா அச்சகம், வாடிப்பட்டி 625 218



நூலாசிரியர்
வித்வான் கி. கோபாலகிருஷ்ண ஐயரும்
அன்னாரது துணைவியாரும்

# முகவுரை

திருவிந்திரபுரி அநுமான் பிள்ளைத்தமிழ் என்னும் இந்நூல் எந்தையார், மறைந்த வித்வான் கி. கோபால கிருஷ்ண ஐயர் அவர்களால் 1958ம் ஆண்டு இயற்றப் பெற்றது. திருவிந்திரபுரி எனும் எழில்மிகு சிற்றூர் தற்போதைய நாகை மாவட்டத்தில் மயிலாடுதுறைக்கு மேற்கில் கும்பகோணம் செல்லும் சாலையில் எட்டு கிலோ மீட்டர் தூரத்தில் ஆனைமேலகரம் என்ற பெயரில் இப்போது விளங்குகிறது. இவ்வூரில் 1937ம் ஆண்டு கோடைக்காலத்தில் ஒரு நன்செய் நிலத்தில் கேட்போர் வியக்கும் வண்ணம் ஸ்ரீ வரதராசப் பெருமான், ஸ்ரீதேவி, பூதேவி ஆகிய தெய்வங்களின் பஞ்சலோகச் சிலைகள் கிடைத்தன. அவற்றைப் பெருமுயற்சி செய்து அரசினரிட மிருந்து திரும்பப்பெற்று, இக்கடவுளர்க்கான கற்சிலை களையும், அநுமன் இராமன் முதலிய பிற கடவுளர்க்கான கற்சிலைகளையும் திருவரங்கத்திலே செய்வித்து, இந் நூலாசிரியரான எந்தையார் தன் தம்பியர் இருவரின் உதவியை மட்டும் ஏற்றுச் சொந்த முயற்சியில் ஒரு கோயிலை நிர்மாணித்து 1942ம் ஆண்டு ஏப்ரல் 22ம் நாள் குடமுழுக்குச் செய்வித்தார். இக்கோயிலுக்கான பூசனை, வழிபாடு ஆகியவற்றுக்கும் ஏற்பாடு செய்து அவை இன்றளவும் தொடர்கின்றன.

இந்நூலாசிரியர் சொல்லின் செல்வனாகிய அநுமனிடம் அளவற்ற பக்தி பூண்டவர். 1927லேயே பள்ளிப் பாட புத்தகங்கள் எழுதப்புகுமுன் ''*இராமதூதன்*'' என்ற அநு மனது வரலாற்றைத் தனது முதல் நூலாக எழுதி வெளி

யிட்டார். இராமதூதன் மதுரைத் தமிழ்ச் சங்கத்தாரின் மதிப்புரையை "செந்தமிழ்"ப் பத்திரிகை வாயிலாக அவ்வாண்டிலேயே பெற்றதை இந்நூலின் உரையாசிரியர் எடுத்துக் கூறியுள்ளார். அநுமனிடம் அவர் கொண்ட இப்பக்திதான் "பத்திச்சுவை நனிசொட்டச் சொட்ட" இந்நூல் எழுதுவதற்குக் காரணமாயிற்று. 1958 லேயே இந்நூல் எழுதப் பெறினும், உடனே அச்சிட்டுப் பதிப்பிக்க முடியாதவாறு நூலாசிரியர் நோய்வாய்ப்பட்டு 1960 ஜனவரித் திங்களில் இறைவனடி சேர்ந்தார்.

எந்தையாரின் நிறைவேறாமற்போன நினைவுகளை நிறைவேற்றுவான் வேண்டி, ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபர்களின் அருளாசியுடனும், சென்னைக் கிருத்துவர் கல்லூரித் தமிழ்ப் பேராசிரியர் காலஞ்சென்ற பூ. ஆலால சுந்தரனார் போன்ற தமிழ் அறிஞர்களின் உதவியுடனும் 1971ம் ஆண்டு இந்நூலின் மூலம் மட்டும் அச்சேறியது. அச்சிட்ட நூலைக்கண்ட சமயச் சான்றோரும் செந்தமிழ் அறிஞரும் வெகுவாக இதைப் பாராட்டினர். பத்திரிகை கள் பலவும் புகழ்ந்து மதிப்பீடு செய்தன. தமிழ் நூல் களிடையே அநுமனின் அருஞ்செயல்களைப் போற்றும் நூல் எதுவும் இல்லாத குறையை இந்நூல் நிறை செய்தது. ஆனால் நூலைத் தக்க உரையுடன் வெளி யிடாதது ஒரு பெருங் குறையாகவே இருந்து வந்தது.

இக்குறை தீர பரிதிமாற் கலைஞரின் முதன்மை மாணவராகிய ந. பலராம ஐயரின் அன்பு மகனாரும் இந் நூலாசிரியர்பால் பெருமதிப்பும் பேரன்பும் பூண்டவருமாகிய பேராசிரியர், டாக்டர் வித்வான் ந. சுப்ரமண்யன் அவர்கள் முன்வந்துள்ளார்கள். இந்நூலாசிரியர்

உரையாசிரியரின் தந்தையாரிடம் குருகுலவாச முறையில் தமிழைப் பயின்றவர். அவருடைய குருபக்தி ஈடு இணை யற்றது. தமது ஆசானின் பெயரைக்கூட உரையார். அவருடைய இறையுணர்வு, தமிழ்ப்பற்று, தேசாபிமானம் இவையும் அளவிட முடியாதவை,

பரிதிமாற்கலைஞர் அவர்கள் தமது ஆசிரியராகிய மதுரை சபாபதி முதலியாரின் திருக்குளந்தை வடிவேலன் பிள்ளைத்தமிழைப் பதிப்பித்தார். பரிதிமாற் கலைஞரின் இயற்றமிழ் மாணவருள் முதன்மையராகிய, ந. பலராம ஐயரின் யௌவநாம்பிகை பிள்ளைத்தமிழுக்கு இந்நூலின் உரையாசிரியர் ஆகிய டாக்டர் ந. சு. அவர்கள் உரை எழுதினார்கள். டாக்டர் ந. சு. அவர்களே காந்தி பிள்ளைத்தமிழ் இயற்றி அதற்கு உரையும் எழுதியுள் ளார். இப்போது அவர் (டாக்டர் ந. சு. அவர்கள்) தன் தந்தையாரின் மாணவராகிய இந்நூலாசிரியரின் பிள்ளைத் தமிழுக்கு உரை வகுத்துள்ளார்கள். எனவே புதுக்கவிதை யுடன் போராடும் தமிழன்னைக்குப் பரிதிமாற்கலைஞர் பரம்பரையின் பிள்ளைத்தமிழ்த் தொண்டு தொடர்கிறது. தவிர, இப்பிரபந்த வகையைப் பேணி வளர்க்கும் பொறுப்பு இப்பரம்பரைக்கே உரியது போலும்.

1897ல் பிறந்த இந்நூலாசிரியரின் நூற்றாண்டு விழா 1996 மே மாதம் தொடங்குகிறது. இவ்விழாவின் முதல் நிகழ்ச்சியாக இந்நூல் வெளிவருவது சாலப் பொருத்தமே. தம் எண்பத்தோராம் வயதில் தம் உடல் தளர்வைப் பொருட்படுத்தாது, இரவு பகலாக உழைத்து இந்நூலை உரையுடன் வெளிக் கொணரும் டாக்டர் ந. சு. அவர்கள் பால் எங்களுக்கு ஏற்படும் நன்றி உணர்ச்சியினை

''விரிப்பின் அகலும் தொகுப்பின் எஞ்சும்''. இவ்வுரை எழுதுவதைத் தம் கடமையாகக் கருதும் அவரது மனப் பாங்கு எம் நெஞ்சங்களை நெகிழ்வித்து இவ்வுடன் பிறவாச் சோதரர் பால் எமக்குள்ள பாச உணர்வை வலுப்பெறச் செய்கிறது. இப்பெருமகனார் எழுதித் தமிழன்னைக்கு அர்ச்சித்த எண்ணற்ற மலர்களில் இந் நூலும் ஒரு வாடா மலராகத் திகழ்வது திண்ணம்.

இந்நூலை இணையற்ற முறையில் எழில்கூடப் பதிப் பித்து உதவிய திருவாளர்கள் என்னெஸ் பப்ளிகேஷன்ஸ்க் கும் குறிப்பாக திரு. ந. சுந்தரேசன் அவர்களுக்கும் நாங்கள் என்றென்றும் நன்றிக்கடம் பூண்டவர்களா வோம்.

இறுதியாக, தமிழ் கூறும் நல்லுலகம் இந்நூலை வரவேற்பதுடன் அமையாது, இதுபோன்ற நூல்கள் அருகிவிடாமல் தமிழ் அறிஞர்களைப் போற்றி மேன் மேலும் இதுபோன்ற நூல்கள் வெளிவர உதவ வேண்டு மெனக் கோருகிறோம்.

கோ. கிருஷ்ணமூர்த்தி
கோ. சீதாராமன்

# முன்னுரை

*பிள்ளைத்தமிழ்* : பிள்ளைத்தமிழ் என்பது தமிழிலுள்ள பிரபந்த வகைகளுள் ஒன்று. இம்மொழியில் முதல் முதல் இயற்றப்பட்ட அத்தகைய இலக்கியம் குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் என்பது. அதனை ஒட்டக்கூத்தர் இயற்றிய தாகக் கூறுவர். பனிரண்டாம் நூற்றாண்டிற்கு முன்பு நாம் அறியும் வகைப் பிள்ளைத்தமிழ் இலக்கியம் இயற்றப் பெறவில்லை. ஆயினும் ஒரு பாட்டுடைத் தலைவனைக் குழந்தையாகப் பாவித்துக் கொண்டு அவனைக் குழந்தைச் செயல்களில் ஈடுபடுமாறு அன்போடு வேண்டும் இலக்கிய முறையைப் பெரியாழ்வார் (8ம் நூற்றாண்டு) என்னும் வைணவப் பெரியார் ஓரளவு சோதனை செய்திருக்கிறார். ஆயினும் அவை இன்று நாம் பிள்ளைத்தமிழ் என்று சொல்லும் பிரபந்தத்தின் உருவில் அமையவில்லை. அவ் வுருவாவது நூலைப் பத்துப் பருவங்களாகப் பிரித்துக் கொண்டு ஒரு பருவத்திற்குப் பத்துப் பாட்டென்று ஒரு சங்கேதம் ஏற்படுத்திக்கொண்டு இலக்கியத்தை இயற்று வர். அப்பத்துப் பருவங்களாவன: பாட்டுடைத் தலைவர் ஆண்மகனாயின் காப்பு, செங்கீரை, தால, சப்பாணி, வாரானை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்றும் பெண்பாலாயின் ஈற்று மூன்று பருவங்களை அம்மானை, நீராடல், பொன்னூசல் என்று மாற்றியும் அமைத்துக் கொள்வர். அதில் காப்புப்பருவம் பெரும்பாலும் பதினொரு பாடல்களாக அமைந்துவிடும். ஆயினும் பருவந்தோறும் பாடல்கள் எண் குறைந்தும் வருவதுண்டு: உதாரணம் காந்தி பிள்ளைத்தமிழ். மற்றும் காப்புப்பருவத்தில் *பலராம ஐயர்* இயற்றிய *யௌவநாம்பிகை பிள்ளைத்தமிழில்*

பதினொரு பாடல்கள் உள்ளன; ஆயினும் எமது கார்த்தி பிள்ளைத்தமிழில் 10 பாடல்களே உள்ளன. இப்பத்துப் பருவங்களில் உள்ள பாடல்கள் தவிர காப்பு, ஆசிரிய வணக்கம், நூற்பொருள் என்று பிற பாடல்களையும் முற் சேர்ப்பதுண்டு. காந்தி பிள்ளைத்தமிழில் நூற்பயன் என்று ஒரு பாடல் பிற்சேர்க்கையாக அமைந்துள்ளது.

தமிழ் இலக்கியத்தில் ஆதிகாலத்தில் பிள்ளைத் தமிழைப் பற்றிப் புலவர்களும் இலக்கணர்களும் அறிந் திலரோ எனில் தொல்காப்பியம் புறத்திணை இயற் சூத்திரம் 64ல் ஒரு குறிப்புக் காண்கிறது : 'குழவி மருங் கிலும் கிழவதாகும்' என்றார் அவ்வாசிரியர். அதற்கு உரைத்த நச்சினார்க்கினியர் 'மருங்கென்றதனான் மக்கள் குழவியாகிய ஒரு மருங்கே கொள்க, தெய்வக் குழவியின் மையின் ... ஒரு திங்களிற் குழவியைப் பற்றிக் கடவுள் காக்க என்று கூறுதலாலும், பாராட்டுமிடத்துச் செங்கீரை யும் தாலும் சப்பாணியும் முத்தமும் வரவுரைத்தலும் அம்புலியும் சிற்றிலும் சிறு தேரும் சிறுபறையும் எனப் பெய ரிட்டு வழங்குதலாலும் என்பது' என்றார். இதனால் தொல் காப்பியரும் பிள்ளைத்தமிழ் இலக்கியத்தின் அடிப்படையை யேனும் அறிந்திருந்தார் என்பதும் நச்சினார்க்கினியர் தெய்வக் குழவியைப் பிள்ளைத்தமிழில் பாடார் என்பதும் புலனாகின்றன. நச்சினார்க்கினியர் காலத்திற்கு முன்பே இயற்றப்பட்ட குலோத்துங்கன் பிள்ளைத்தமிழ் அவர் கூறும் இலக்கண விதிக்குக் கட்டுப்பட்டே நிற்கிறது. ஆனால் குமரகுருபரரது மீநாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ் முதலியவை இவ் விதியை மீறிக் கடவுட் குழவியரை இவ்வகை இலக்கியத் தில் பாராட்டும். காலப் போக்கில் இலக்கியம் இலக் கணத்தைப் புறக்கணித்துவிட்டிருக்கிறது.

பிள்ளைத்தமிழ் சிற்றிலக்கிய வகையில் சேர்க்கப் பட்டிருப்பினும், பரணி, கலம்பகம், கோவை போல கவித்துவம் கைவந்த பெரும் புலவர்களாலேயே இயற்றப் பெறும். நாமறிந்த சிறப்பான பிள்ளைத்தமிழ் நூல்களிற் சிலவற்றைக் குறிப்போம் : குமரகுருபரரது மீநாட்சியம்மை பிள்ளைத்தமிழ், முத்துக்குமார சுவாமி பிள்ளைத்தமிழ்; சிவஞான முனிவரது அமுதாம்பிகை பிள்ளைத்தமிழ்; மீநாட்சி சுந்தரம் பிள்ளையின் சேக்கிழார் பிள்ளைத்தமிழ்; பகழிக்கூத்தரின் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்; மதுரைச் சபாபதி முதலியாரின் திருக்குளந்தை வடிவேலன் பிள்ளைத் தமிழ்; பலராம ஐயர் இயற்றிய யௌவநாம்பிகை பிள்ளைத்தமிழ். இவை போன்றவை பிறவும் உளவேனும் சிலவற்றைக் குறித்தோம்.

*அநுமான் பிள்ளைத்தமிழ்* : இப்பிள்ளைத்தமிழ் நூல் சோழ நாட்டில் காவிரிக் கரையில் உள்ள திரு இந்திரபுரி (இஃது யானை மேலகரம் என்றும் பெயர் பெறும்) என்னும் நல்லூரில் கோயில் கொண்டுள்ள அநுமான் மீது இயற்றப் பெற்றது. இது பிள்ளைத்தமிழ் மரபுப்படி பத்து பருவங்களாகவும் ஒவ்வொரு பருவத்திலும் பத்துப்பாடல் களாகவும் அமைத்துக் கொண்டு இயற்றப்பட்டுள்ளது. இதில் இப்பதிற்றுப்பத்துப் பாடல்களைத் தவிர முதற்கண் கணபதி வணக்கம், குருவணக்கம் ஆகிய இரு பாடல்கள் உள்ளன. பிள்ளைத்தமிழ் இலக்கணம் வழுவாதவாறு காப்பு, செங்கீரை, தால, சப்பாணி, முத்த, வருகை, அம்புலி, சிற்றில், சிறுபறை, சிறுதேர் என்று பருவங்கள் அமைந்துள்ளன. இந்நூலிற் செய்யுள் எளிய நடையது; ஆயினும் செந்தமிழ் மரபையொட்டியும் புராண இதிகாச

வரலாறுகளை உள்ளடக்கியும் ஆங்காங்கு அணிநலம் திகழ விளங்குகின்றது. காப்புப் பருவத்தில் முறைப்படித் திருமால் வணக்கம் முதற்செய்யுளாக அமைந்துள்ளது, அவன் காக்கும் கடவுளாதலின். ஆயினும் மலர்மகளும் கலைமகளும் இடம் பெறாது சீதளா தேவியும் முனிவரரும் இடம் பெற்றுள்ளனர். இப்பருவத்தில் எக்கடவுளரைத் தான் பாடவேண்டும் என்பதோர் நியதி இல்லாமையால் ஒவ்வொரு ஆசிரியரும் தமது விருப்பம்போல் கடவுளரைக் கூட்டியும் கழித்தும் பருவத்தை அமைப்பர். அவ்வாறே இந்நூலாசிரியரும் செய்துள்ளார். கற்பனை நயம் விளங்க அமைந்துள்ள இந்நூலில் ஆசிரியர் சந்தப் பாடல்களை அதிகமாக அமைக்காமல் சாதாரண விருத்தப்பாக்களாகவே செய்யுட்களை அமைத்துள்ளார். சில பாடல்களில் எல்லா அடிகளும் சீர் ஒத்துவராமல் பிறழ்ந்து இருப்பது காணப் படும். அதற்குக் காரணம் ஆசிரியர் காலத்திற்குப் பிறகு நூலைப் படியெடுத்தோர் செய்த பிழைகளே என்பதில் ஐயமின்று. ஆயினும் இப்போது அதைத் திருத்தப் புகுந் தால் மூலபாடம் சரிவர அமையாமற் போய்விடுமாதலின் அம்முயற்சியைக் கைவிட்டு நூல் இப்போது உள்ள வாறே எடுத்துக் கொண்டு உரை எழுதிப் பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

நூலிற் கீழ்க்காணும் இதிகாச, புராணச் செய்திகள் இடம்பெறுகின்றன. 1. அநுமார் கன்னத்தில் இந்திரன் வச்சிராயுதத்தால் அடித்தனன்; 2. அநுமான் இலங்கை யில் முதல்நாள் போரில் இராமனுக்கு வாகனமாக அமைந்து நின்றான்; 3. அநுமான் வாயுபுத்ரன்; 4. அவன் இலங்கணியைக் கொன்றனன்; 5. சுரசை என்னும் அரக்கியின் வாயிற்புகுந்து உடலைக் கிழித்து வெளியே

வந்து அவளைச் சுவர்க்கத்திற்கு அநுமான் அனுப்பினன்; 6. அவன் இளமையில் சூரியனை ஒரு பழம் என்று கருதிக் கவரப் பாய்ந்தனன்; 7. அவன் வாயுபுத்திரன்; 8. அவன் தாய் அஞ்சனை; 9. அவன் சூரியனிடம் கல்வி கற்றான்; 10. ஐந்து முகமுடையான்; 11. இலங்கையிற் சீதையைக் கண்டு அவளிடம் கணையாழியைத் தந்தவன்; 12. அவன் பிரமசாரி; 13. இராம லக்குமணர்களை உயிர்ப்பிக்க சஞ்சீவி மலையையே கொணர்ந்தவன்; 14. அவன் மதுவனத்தை அழித்தான்; 15. சுயம்பிரபைக்கு அவள் துறக்கப் பேறடைய உதவினான்; 16. இலங்கைப் போர் முடிந்த பிறகு, ராமன் வரத் தாமதமாகுமோ என்று அஞ்சித் தீக்குளிக்க முயன்ற பரதனைத் தடுத்துக் காத்தனன்; 17. சிவபிரான் திரிபுரத்தை எரித்தார்; 18. அவர் அட்டமூர்த்தி; 19. விநாயகர் கரகம் கவிழ்த்துக் காவிரியைப் பெருக்கெடுக்கச் செய்தார்; 20. தக்கன் யாகத்தில் சிவபெருமானைப் புறக்கணித்ததால் தன் தலையை இழந்து மறுதலை பெற்றனன்; 21. தக்கன் சந்திரனைச் சபித்தனன்.

இந்நூலின் ஈற்றயல் பாடல் உயர்ந்த கருத்துக்களை முற்றுருவகமாக அமைத்துக் கூறியிருப்பது அறிந்து இன்புறற்பாலது.

இந்நூலாசிரியரின் அறிவறிந்த மக்களான ஸ்ரீமான்கள் கிருஷ்ணமூர்த்தி, சீதாராமன் என்போரது நன்முயற்சியால் 1971ல் இந்நூல் மூலம் மட்டும் அச்சிட்டு வெளியிடப் பெற்றது. அதற்குக் கால் நூற்றாண்டிற்குப் பிறகு, மறுபடியும் அன்னாருடைய நன்முயற்சியாலேயே, இந்நூல் உரைப்பதிப்பாக வெளிவருகின்றது.

நூலாசிரியர் : இந்நூலை இயற்றியவர் கி. கோபால கிருஷ்ண ஐயர் என்பார். அவர் (1897—1960) தஞ்சை மாவட்டத்தைச் சேர்ந்தவர்; ஆனைமேலகரம் என்னும் சிற்றூரினர். சிறுவயதிலேயே தமிழ் ஆர்வம்மிக்கு அதன் இலக்கிய இலக்கணங்களைக் கடலூர் ந. பலராம ஐயரிடம் வரன்முறையாகக் கற்றுத் தேர்ந்தார். ஐயரவர்கள் ஆசிரியர் மனையிலேயே சில ஆண்டுகள் தங்கியிருந்து தமிழ் நூல்களைக் குருசிஷ்ய பாரம்பரிய முறையில் பாடம் கேட்டார் என்பது குறிப்பிடத்தக்கது. பிறகு அவர் மாயவரம் உயர்நிலைப் பள்ளியில் முப்பத்திரண்டு ஆண்டு கள் தொடர்ந்து தமிழாசிரியராயிருந்தார். அவரது தெய்வ நம்பிக்கை, தமிழ்ப்பற்று, குருபக்தி என்பவற்றிற்கு ஈடு இணை காண்பதரிது.

இவர் கடலூரில் பலராம ஐயரிடம் பாடம் கேட்டு வந்த காலத்தில் ஒருமுறை மிகுந்த நோய் வாய்ப்பட்டு வருந்திப் பிறகு குணமடைந்தார். அத்தருணத்தில் அவர் தமது ஆசிரியர் மீது ஆசிரிய பஞ்சகம் ஒன்று நானூறு வரிகளில் பாடியதாகத் தெரிகிறது. ஆனால் அது இப் போது கிடைக்கப் பெறவில்லை.

கோபாலகிருஷ்ண ஐயரவர்கள் 1927-ல் ஸ்ரீ ராம தூதன் என்னும் சிறிய நூல் ஒன்றினை இயற்றினார்; பள்ளி மாணவர்களுக்குப் பயன்படுதல் வேண்டி இயற்றப் பெற்ற அந்நூல் அதே ஆண்டு மதுரைச் 'செந்தமிழ்'ப் பத்திரிகையில் 'இந்நூல் வானர வீரனாகிய மாருதியின் சரிதத்தை இனிய தமிழ் நடையில் எடுத்துரைப்பது' என்று மதிப்புரைக்கப் பெற்றுள்ளது. ஐயரவர்களுக்கு எப்

போதுமே ராம தூதனான அநுமான் மீது நூலியற்றும் பேரவா இருந்து வந்தமை இதனின்றும் புலனாகின்றது.

அவர் தமது சொந்த ஊரில், அங்குத் தற்செயலாகக் கண்டெடுக்கப் பெற்ற வரதராஜப் பெருமாள் முதலிய கடவுளர் விக்ரகங்களுக்குக் கோயில் கட்டி வழிபாட்டிற்கு வழிவகுத்துள்ள வரலாறு அருமையானது. அக்கோயில் பூசனை முதலியவற்றிற்கும் ஏற்பாடுகள் செய்துள்ளார். அதில் கோயில் கொண்டுள்ள அநுமானைப் பாட்டுடைத் தலைவனாக வைத்துத்தான் இந்த நூல் இயற்றப் பெற்றது.

உடுமலைப்பேட்டை }
20-3-96 }

ந. சுப்ரமண்யன்

## இந்நூலிற் காணும் தேவர், மானுடர் ஆகியோர் பெயர் வரிசை

[இராமாயண பாத்திரங்கள் யாவரையும் மானுடராகக் கருதிற்று]

அஞ்சனை (தே.)
அநுமான் (மா.)
அயன் (தே.)
அட்டமூர்த்தி (அரன், சிவன், படர்சடைக் கடவுள், மாதேவன்) (தே.)
அரி (கோவிந்தன், திருமால், நாராயணன், மாயவன்) (தே.)
அளகைக்கோமான் (தே.)

இமவான் (தே.)
இராமன் (காகுத்தன்) (மா.)
இலங்கணி (மா.)

உமை (தே.)

கணபதி (தே.)
கதிரவன் (பரிதி) (தே.)
காமன் (தே.)
கால் (வளி, வாயு) (தே.)
காவிரிநாடன் (சோழன்) (மா.)

சானகி (மா )
சுயம்பிரபை (மா.)
சுரசை (மா.)

தக்கன் (தே.)
தசமுகன் (மா.)
ததிமுகன் (மா.)

திருமகள் (தே.)
பலராமன் (மா.)
பாண்டியன் (மா.)
பூதேவி (தே.)
மகபதி (இந்திரன்) (தே.)
மார்க்கண்டன் (மா.)
மறலி (தே.)
வடிவேலன் (தே.)
வள்ளி (மா.)
வீமன் (மா.)

## உரையில் எடுத்தாளப்பட்ட மேற்கோள் நூல்கள் அகராதி

கந்தபுராணம் (கந்த.)
கந்தர்கலிவெண்பா
கம்பராமாயணம் (கம்பரா.)
கலித்தொகை (கலி.)
காஞ்சிப்புராணம்

குயில் பாட்டு (குயில்)
குறிஞ்சிப்பாட்டு (குறிஞ்சிப்.)

சிவஞான சித்தியார் — சிவஞான
முனிவர் உரை
சீவகசிந்தாமணி (சிந்தா.)

செகப்பிரியர் (Shakespeare)

திருக்குறள் (குறள்)
திருமுருகாற்றுப்படை (திருமுருகு.)
திருவாசகம்

தேவாரம்

தொல்காப்பியம் (தொல்.)

நன்னூல் (நன்.)

பதிற்றுப்பத்து (பதிற்று.)
பரிபாடல்
பாமாலை

புறநானூறு (புறம்.)

பெரியதிருமொழி

மணிமேகலை (மணி.)

மலைபடுகடாம் (மலைபடு.)

முல்லைப்பாட்டு (முல்லைப்.)

வீரசோழியம்

# உள்ளுறை

ஸ்ரீராமஜயம்

# அநுமான் பிள்ளைத்தமிழ்

## கணபதி காப்பு

சீர்பூத்த செம்மைப் பனிப்படலம் படரும்
சொல்வாணர் பரவும் சிறப்புடைய வரைகளின்
ஏர்பூத்த இமவான் பெற்றெடுத்த இன்கொடி
இன்புற்று மருவி எந்தையொடுங் கூடி
நீர்பூத்த அண்டம் மகிழ்ந்திடவே அருளும்
நின்மலக் கணபதியைச் சிந்தை செய்வாம்
பார்பூத்த பல்புகழ்ப் பரிதிகுலம் விளங்கவரு
பார்த்திபன் துணைவனைப் பாடுதமிழ் தழையவே!

## குருவணக்கம்

சிலராலிச் சீரியனைச் சிந்தையினிற் றேற்றாதார்
பலராலிப் பண்புடையான் அருள்பெற்றார் ஆதலினால்
குலராமன் தூதுவனைக் குலம்உயர யாம்பாடப்
பலராமன் தாளிணைகள் பல்காலும் பழிச்சுதுமே.

## I. காப்புப் பருவம்

### திருமால்

பூமேவு செங்கமல வல்லியும் புகழ்கொண்ட —1
பூதேவியும் புடைநிற்க விளங்குமொரு விமானத்தில்
நாமேவு திருமொழிப் பாசுரம் பரவிட
நாகணை யமரும் நாராயணன் காக்க!
தேமேவு செழும் பொழிலின் தீங்கனிகள் தேனோடு
திரண்டு பாயும் திருவிந்திர புரியமரும்
பாமேவு வன்மைபெறு பல்கலைக் குரிசிலைப்
பனித்தொடையல் மார்பனை அஞ்சனை சுதனையே

### சிவபெருமான்

அண்டபகி ரண்டங்கள் அரற்றியிட வானூடு அட்டதிக் —2
கயங்களும் அலைந்திடப் பறந்து சென்று
கண்டவுயிர் அற்றனவும் கடும்வயிறு நிறைத்திடவே
கண்டமரர்
கலங்கிக் காப்பாய் எனக்கடிதின் வேண்டலும்
அண்டமது நேராக அரியயனும் அருகுவர அம்மூவர்
புரங்களும் அற்றுவிழ அட்டமூர்த்தி !
கண்டவிடர் கருதிடுமுன் களைந்திடும் கண்கண்ட
தெய்வமாம்
காலின் மைந்தனை அநுமனைக் காக்கவே !

### பார்வதி

அகிலசரா சரங்கள் அனைத்தையும் அழகுபெறும் —3
அகவயிற்றின்
அன்புடன் அணைத்(து) ஆரமுதம் ஊட்டியும்
அகிலங்கள் தாழா(து) அழகனுடன் அருகமர்ந்து
அனைத்துலகும்
காக்கின்ற அன்னைக்(கு) இதுவும் பரமோ ?
அகில்மரமும் ஆரமும் செறிகானில் அருளுடைய காகுத்தன்
துணையாகி அடவியெலாம் துருவித் தேடி
முகில்பதியும் மாடமும் முறையுயரும் கோபுரமும் பொலியும்
முர ணகரில் தேவியைக் கண்டனனைக் காக்கவே !

### விநாயகர்

பொன்கொழித்து மணிவரன்றித் தவச்சாலை —4
பழச்சோலை
புனச்சாலி பூங்கமுகம் தேங்கதலி தீந்தெங்கு
பொன்னகரம் பொலிமடங்கள் புகழ்க்கோயில் இன்னபல

பொலிந்திடவும் புனல்நாடு எனப்புலவர் ஏத்திடவும்
பொனின்கரகம் தனைக்கவிழ்த்துப் பொன்னியெனப்
பொலிந்திடச்செய்
ஒருகோட்(டு) இருஞ்செவி மும்மதத்து நால்வாயாய்!
பொன்னகரம் மண்ணாகப் பொருதீயின் சுட்டெரித்த
பொருதிறலன் அநுமனைப் புரிந்துநீ காக்கவே !

### முருகன்

புறகிட்டவுணர் நெரியுற்றெதிரில் அறைபட்டுடலம் —5
புண்ணாக
கறைபட்டமரன் இடிபட்டருகில் பிடிபட்டுலகில் கலைகற்க
நறையொட்டிதழ்மகள் பிடியுற்றமரும் நாதாவே !
சிறைபெற்றசனகி நிலையுற்றிடச்செயும் திறல்பெற்ற
அநுமனைக் காக்கவே !

### பிரமதேவர்

வண்டாடு பொன்றாது வண்டாமரை நின்றருளும் —6
குலமகளைக்
கண்டாரும் கொண்டாடும் பெண்டாகக் கொண்டாளும்
கலைவலவ !
உண்டாடும் திண்டோளான் ஒண்போரில் திண்டாட
உயர்தோளில்
பண்டாரும் குலராமன் கண்டானைப் பண்போடு
காக்கவே!

### தேவேந்திரன்

அமரர் பலரும் அரஅர எனவே கொண்டாடும் —7
அமரா பதிவாழ் ஆயிரம் கண்ணுடை மகபதியே !
பமரம் படரும் பனிமலர்ப் பொழில்சூழ் புரிவளரும்
குமரன் அலையும் வளியின் புதல்வனைக் குறிக்கவே

சீதளாதேவி

இச்சைசெயல் சொல்லாகி எவ்வுயிர்க்கும் உள்ளுயிராய் —8
நச்சரவம் அணையாக நல்லுடுக்கை ஒலிப்பவளே
செச்சைதனை ஏறிவரும் சிங்காரத் தேவியே !
விச்சைவல வீரன்இவன் விழைந்திடநீ காப்பவே

சத்தமாதர்கள்

வரதமும் அபயமும் அன்னமும் வாய்த்தவள் —9
இடபமும் உரகமும் இவரப் பார்ப்பவள்
கருதநு மயிலினைக் கடாவித் தேர்ந்தவள்
கருடனைக் கொடியென ஏறிப் பார்ப்பவள்
கரியதொரு துகிலொடு காரணி பூண்டவள்
கருதரு குலிசமும் களிறும் பெற்றவள்
வரையுயர் மகிடமும் வாய்க்க உற்றவள்
மகிழ்வொடும் அநுமனை மருவிக் காப்பவே !

முப்பது கோடி தேவரும் முனிவரரும்

ஒருநாமம் ஒருருவம் இல்லாத திருமால் —10
இராமனெனும்
திருநாமம் பெற்றுதித்துத் தீக்கலியைப் போக்கியருள்
காலமுதல்
கருநாமம் பெறோமென்று கருத்திருத்தித் தவம்செய்யும்
கான்முளையைப்
பெருநாமத் தேவர்களும் பெருந்தவத்து முனிவரரும்
காப்பவே !

## II. செங்கீரைப் பருவம்

நீராட்டிப் புகைபோட்டுப் பாலூட்டி நெற்றியில் —1
பொட்டுமிட்டுப் பட்டமும் அதனிற் சேர்த்து

ஏரீட்டும் சூழியக் கொண்டையும் எழில்பெறு
காதணியும் பதக்கமுடன் அரைஞாணும் பூட்டிப்
பாராட்டு பரிபுரமும் பல்பூணும் பட்டுடையும்
பாங்காகச் சேர்த்தி மடியமர்த்தும் தாய்மகிழச்
சீராட்டும் செல்வனே செங்கீரை ஆடியருளே !
தென்னிலங்கை வென்றவனே செங்கீரை
ஆடியருளே !

திருக்கோல நறுமுடியில் திருத்திய கொண்டையும் —2
சுட்டியொடு காதணியும் குண்டலமும் திவண்டாட
இருக்கோலிடு பரிபுரமும் சதங்கையும் இடுப்பிலிடு
நாண்காசும் இரைந்து விரைந்(து) இரட்ட
மருக்கோல மலர்மாலை மார்பினில் புரண்டாட
இதழ்வழியும் இன்னமுதம் அழகுமிழ்ந் துருண்டோடச்
செருக்கோடு செங்கீரை யாடியருளே ! மருவரக்கர்
தென்னிலங்கை செற்றவனே செங்கீரை
யாடியருளே !

அருமையுடன் அஞ்சனை மார்பணைத்து அகத்துவகை
பூத்தபொழுதில் —3
பெருமையுடன் தோளேறிப் பெருவெளியை நோக்கிடலும்
பிறங்குவானிற்
கருதரிய கதிரவனைப் பணிகொள்ளப் பழமெனவே
கருதித்தாவும்
பொருதிறலாய் செங்கீரை யாடியருளே ! போரரக்கர்
தென்னிலங்கை செற்றவனே ! செங்கீரை ஆடியருளே !

பரிதியின் ஒளிவிரி திருமுகம் அசைந்தாடப் —4
பனிமதி நிலவென முளைத்தெழும் நகையாட
எரிமணி அணிகுழை வெயிலொடும் இணைவிழி
பொழியும் இன்னருள் நிலவென வீசச்

சுருதியின் இசையெனச் சுரும்பர்கள் பாடும்
சொரிமலர் மாலைகள் பன்னிறம் கால
இருகையும் இருநிலம் இசைந்தாடுக செங்கீரை !
தென்னிலங்கை செற்றவனே ! ஆடுக செங்கீரை !

கதிர்முக வியர்வொடு கனியிதழ் வழிநறை படிமிசைப் படிந்தாட —5
எதிர்படு புழுதியில் இணையடி இடுதலின் கருதிறம் கொண்டாடக்
கதிரவன் இரதமுன் கலையினைக் கற்றசொல்ஆட ஆடுக செங்கீரை !
எதிரிடு கடல்கடந்து தென்னிலங்கை செற்றவனே ஆடுக செங்கீரை !

இளநகை முகமலர் எழில்நலம் வாடாமே —6
இணைவிழி வழிபுனல் இருநிலம் படியாமே
உளமலர் உவகையின் ஒருவகை கோடாமே
அழுகுரல் அஞ்செவி சிறிதினும் கேளாமே
வளமுறு கழலிணை தொட்டிலை உதையாமே
வளமலி கரமலர் வயின்வயின் ஓங்காமே
இளவிரல் இருநிலம் மிசைபட ஆடுக செங்கீரை !
இலங்கினி வென்றவ ஆடுக செங்கீரை !

கடல்படு புவனமும் கருதரு செல்வமும் —7
கனவினிற் றோன்றும் பொருளென்றே
அடலுறு திறலொடு அடுபடைக் கலங்களும்
அமர்தரு நிலைகளும் விழுமென்றே
கடனது புரிதலும் கலைபல பெறுதலும்
அழிவறும் அருமையாம் பொருளென்றே
திடனுற ஆடுக ! செங்கீரை ! இலங்கினி
வென்றவ ! ஆடுக ! செங்கீரை !

வஞ்ச மனத்தர் வன்பகை கொண்டு வலிந்தேவும் —8
வல்வினை தொலைந்திடவும்
கெஞ்சும் உளத்தர் கீழ்மை அகன்று உழுவல் அன்பு
பெற்றிடவும்
அஞ்சிடு பேய்கள் விஞ்சிடு வெவ்விடம் அரும்பிணி
யாவையும் அகன்றிடவும்
தஞ்சம் அளித்தவ! செங்கோ செங்கீரை! தவநிதி
செங்கோ செங்கீரை!

அண்டங்கள் அரங்காக ஆருயிர்கள் பதுமையாக —9
ஆட்டுவிக்கும் பெம்மான்
கண்டுன்னைக் கானகத்துக் காதலியை மீட்பதற்குக்
கவிக்குலத்தோன் உதவுமெனக்
கொண்டுள்ள அன்பிற்குக் குறைவுசிறி தில்லென்று
கருணையாழி தனைக்கொடுத்த
தொண்டனே ஆடுக செங்கீரை! தூயனே! ஆடுக
செங்கீரை!

அண்டத்தினும் பெரியை! அணுவினும் சிறியை! —10
அருங்காலினும் செல்வை!
கண்டவுருப் பெறுவை! காணாத அருவை! கருதுமிடம்
நிற்பை!
அண்டர்பெறு வரத்தை! அத்தகையன் ஆயிடினும்
அருமந்த குழந்தையுருக்
கொண்டவனே! செங்கோ! செங்கீரை குலராமன்
தூதசெங்கோ செங்கீரை!

## III. தாலப் பருவம்

வானுற் றுயர்ந்த தெங்கின்பழம் வளமருவு வருக்கை —1
மோத
தேனுற் றினிக்கும் சுளைபீறித் தேமாங் கனியொடு
கதலியும்

கானுற் றிடுகாவிரித் துறைப்பதி வளர்வோய் ! தாலோ
தாலேலோ !
வானுற் றுயர்ந்த வளிபெற்ற மைந்தா தாலோ
தாலேலோ !

களைத்திளங் கற்றெருமை வயலுழக்கிக் கதிர்தின்(று) —2
அயல்நின்ற கன்றுன்னிப் பால்சுரந்து
நனைத்தில்லம் சேறாக்கி வளம்பெருக்கும் நன்மனைகள்
நெற்குவியல் பொற்குவியல் மிகப்பெற்று
அனைத்துலகும் வியக்கின்ற அளவினதாம் இந்திரபுரி
அரசே ! தாலோ தாலேலோ !
வினைத் திட்பம் மிகப்பெற்ற விறல்வளியின் புதல்வனே
தாலோ தாலேலோ !

தெருவெல்லாம் சிற்றில்லம் திண்ணைதொறும் மண் —3
பதுமை வைத்தாடும் பிள்ளைகளும்
பொருவில்லாப் புறநகரில் பொற்பந்து புரவியொடு
மணித்தேர்கள் பெற்றாடும் பிள்ளைகளும்
திருவுடனே விளங்குகின்ற திருஇத்திர புரியமரும்
அரசே தாலோ தாலேலோ !
கருத்துன்பம் கழித்திட்ட வான்வழங்கு கால்பெற்ற
கான்முளையே தாலோ தாலேலோ !

பொழுதொடு நறுமணப் புனலாட்டிப் —4
புகையென பலவிரை கொண்டேத்தித்
தொழுபெரும் கடவுளர் துணைகூவித்
தீயன திட்டிகள் பலகழித்(து)
இழுதொடு இன்னமு(து) ஊட்டினர்
இழைபெறு பணிகளும் பூட்டினர்
தொழுதகை! தாலோ! தாலேலோ!
தூயனே! தாலோ! தாலேலோ!

புகழ்பெறு பல்வகை புனலும் ஆடினள்! —5
பொருவில பதிபல புகழ்ந்து சேர்ந்தனள்!
தகைபடு தானங்கள் தனியுறச் செய்தனள்!
தவம்பல தணிவில தாழ்ந்து நோற்றனள்!
வகைபடும் அமுதுகள் வந்தவர்க் கூட்டினள்!
உலகெலாம் தொழும்படி உன்னையும் பெற்றனள்!
புகழ்படும் அநுமனே! தாலோ தாலேலோ!
பொருவில் ஐம்முகத்தாய் தாலோ! தாலேலோ!

விரற்சுவை உண்டு களித்தமு தூறியமெல்லிதழ் —6
உலராமே
விம்மிப் பொருமி விழுந்து புரண்(டு) இன்குரல்
கம்மாமே
தரைப்படு புழுதியில் தனித்துக் கிடந்து திருவுடல்
கருக்காமே
திருவிழி அஞ்சனம் கரைந்து விழிந்து திருமுகம்
வாடாமே
உரைத்திடு பொன்னினும் ஒளிபெறு மணியினும் குயின்ற
தொட்டில்
உதைத்துப் புடைத்துத் திருவடி மலர்க்கரம் சிறிதும்
நோவாமே
திரைத்தெழு பொன்னித் திருப்பதி அரசே! தாலோ
தாலேலோ!
திருமுகம் ஐந்தும் அமைந்த தேவே! தாலோ
தாலேலோ!

உண்ணெகிழ் தொண்டர் உறுமிடர் போக்கும் —7
ஒப்புயர் வில்லாய்!
ஓதரு மறையை அடங்க உணர்த்திடும்
ஒருதனிப்பெரும!

விண்ணினில் விளங்கிடும் விரிகதிர்ப் பரிதியைப்
பறிக்கும் விறலாய்!
வினைகளைப் போக்கி மெய்யுணர் வளிக்கும்
பெறலரும் வித்தகா!
உண்ணிறைந் தொளிர்ந்து உறுமலம் நீக்கும் ஒண்சுடர்
விளக்கே!
கண்ணமர்ந் துறைந்து கருத்தின் நிறையும்
களங்கமில் மணியே!
பண்ணமர் பாடற் பழம்பதி அநும! தாலோ தாலேலோ!
படைமுகம் ஐந்துடன் பகைவரை வென்றாய்!
தாலோ தாலேலோ!

உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசும் —8
உணர்வற்ற புல்லருடன் ஒரு மொழியும் பேசாதே
கள்ளுறவு கொண்டு கண்டபடி பேசும்
கசடருடன் காமுகர் தம்முடன் கூடாதே
எள்ளலுறும் உலோபியர் இரக்கமிலாப் பாவிகள்
இன்னுயிரை வதைப்பவர் இவர்களை விழியாதே
தெள்ளிய புனற்பதியாய்! தாலோ! தாலேலோ!
திருமுகம் ஐந்துடையாய்! தாலோ தாலேலோ!

கருவின் உருவாகி வந்த கலைபலவும் கற்றுணர்ந்(து) —9
அரைநிமிட நேர மேனும் அயலில் மனம்வையாது
திருவுடனே நாயகனை திருவுள்ளத்து மீதமர்த்தித்
திருடுடைய பல்புலன்கள் தீயச் செற்று
இருளுடைய மலமறுத்து எடுத்துவரு பவந்தொலைத்து
இமைப்பொழுதும் இடையின்றி இருந்தவத்தைச்
செய்தளிப்பாய்!
அருளுடைய கதியளிப்பாய் தாலோ! தாலேலோ!
ஐம்முகத்து அநுமனே! தாலோ! தாலேலோ!

இணையில் அமரர் வரம்பெற்ற ஈடின்மணியே! —10
உலகம் உய்ய மருந்தளிக்கும் ஒண்டிறலாய்!
கணைவில் கதையுடன் கருத்தமரும் கார்மேகத்தின்
கான்மலர் போற்றும் கருதரு பெரியோய்!
துணையில் எனக்கும் தோன்றாத் துணையாகித்
துயரம் போக்கும் துகளறு வழித்துணையே!
பணையிற் பொலிபதியாய்! தாலோ தாலேலோ!
பஞ்சமுக அநுமனே! தாலோ தாலேலோ!

## IV. சப்பாணிப் பருவம்

பூமருவு சோலையிற் பசுந்தளிர் அரும்புகள் கொய்தும் —1
புழுதி விளையாட் டயர்ந்தும்
காமருவு பைங்கிளிகள் கலாபமயில் அன்னங்கள் புறவினுடைப்
பார்ப்புக்களைக் களிபெற வளர்த்தும்
தேமருவு செங்கமலம் கருங்குவளை மறைத்தென்ன திருவுடைய
கரங்கொண்டு கண்பொத்தி விளையாடியும்
வாமரிளம் கைகொடு சப்பாணி கொட்டியருளே!
வண்ணக் கரங்கொண்டு சப்பாணி கொட்டியருளே!

செல்வமிகு மாடத்துச் சிறுவர் பலர்கூடிச் —2
சிறுவண்டி கரும்புரவி செலுத்துதல் கண்டும்
கல்விமிகு கலைஞர்களின் கான்முளைகள் பலர்சேர்ந்து
கருதரிய வாதங்கள் நடத்துதல் கண்டும்
சில்வரிய வண்டுகள் சிறகர் ஒளிவீசிச்
செழுமறையின் இன்னிசை சேர்த்தல் கண்டும்
ஒல்வளைய கைத்தலங்கள் சப்பாணி கொட்டியருளே!
உறுதளிர்க் கரங்கொண்டு சப்பாணி கொட்டியருளே!

உருவளர் பதுமைகள் உறுநிலை கண்டும் —3
ஒள்ளிய நிறத்தன ஒருபடம் பார்த்தும்
திருவளர் வடிவினைத் திப்பிய ஆடியில்
திகழ்வது கண்டு செவ்விதழ் விரித்தும்
மருவிளம் புல்லினை மகிழ்வொடு கறிக்கும்
மழவிளம் கன்றுடன் மடநடை செய்தும்
தருவளர் தளிர்க்கரம் சப்பாணி கொட்டியருளே!
தமனிய வளைக்கரம் சப்பாணி கொட்டியருளே!

பல்லொடு படர்சடைப் பேய்கள் பறந்தோடப் —4
பார்வையின் வாட்டிடு படுதுயர் குலைந்தோடச்
சல்லியப் பாவைகள் சலமிகு தேவதை
சார்ந்திடு சாபங்கள் பாவங்கள் சரிந்தோடக்
கொல்லிய வருவிடம் குலைத்துறு பல்பிணி
குறைபடும் ஊனங்கள் தளர்ந்து விரைந்தோட
மெல்லிய கரங்கொண்டு சப்பாணி கொட்டியருளே!
மிளிரும் மணிக்கரம் சப்பாணி கொட்டியருளே!

அருகுள அமரர்கள் ஆழ்ந்த களிப்பொடும் —5
அயர்ந்தாடப்
பெருகெழிற் பேதையர் பிறங்கிசைச் சதிரொடும்
பெயர்ந்தாட
திருமகள் மாலுடன் திளைத்தாடச் சப்பாணி
கொட்டியருளே!
இருகரம் இணைவுற எழிலுறு சப்பாணி
கொட்டியருளே!

அமரிற் பட்ட அவுணர் உடற்குறை முடித்தலை —6
யோடும்
குருதிப் பெருக்கின் ஆறெனக் கொண்டு குணக்கடல்
ஈர்த்திடவும்

தமரிற் பட்ட வீரர்கள் தத்தம் உயிரைப் பெற்று
உய்ந்திடவும்
தாவிச் சென்று தக்க மருந்தை மலையுடன்
கொடுவந்தும்
அமர்செய் களனில் ஆழி நாயகன் தோளின் அமர
அடுகளம் ஊடே அச்சம் அகற்றி அடுதொழில் புரிந்தும்
பமரம் இசைக்கும் பைந்துணர் சேவக கொட்டுக சப்பாணி
பல்படைக் கொருவன் எனப்பெயர் படைத்தவ
கொட்டுக சப்பாணி!

துன்னார் புரமதில் துவன்றிய சோலையில் தொடுத்த —7
தருக்களைக் கிளையோடும் வேரோடும்
தோன்றிய ஊழிக்காலெனத் துன்றிய சினத்தீயின்
பிடுங்கி முறித்து அழித்திடலும்
ஒன்னார் விடுபடை வீரரை அதிபரை ஒடிமரம்
படையாகச் சாடியும் கொன்றும்
உயிர்விடப் பின்னும் அவருடல் சாந்தெனக் கையினும்
காலினும் உதைத்தும் அரைத்தும்
மன்னா! என்கொல் மற்கடம் அன்று மன்னுயிர் மாற்றும்
மறலியேயென் றோடவும்
மன்னிய மகுடம் பத்துடை அரக்கன் மனமது
நொந்து பற்பல நினைத்திடவும்
பன்னரும் பல்வினை செய்த படைஞ! பண்புறு கரங்கொடு
சப்பாணி கொட்டியருளே!
பார்த்திவர் மகிழ்ந்திடப் பாலன் உருக்கொண்டு வந்த
அநும! சப்பாணி கொட்டியருளே!

உற்ற கவிக்கரசன் ஓங்கிய மதுவனம் ததிமுகன் —8
காவலில் தழைய வளர்ந்திடவும்
உறுகடல் தாண்டி ஒன்னார் புரமதில் உலகம்
புகழ்ந்திடு ஒளிவளர் தாயைப்

பெற்ற கண்கொடு கண்ட பேற்றினில் பெருமகிழ்
வெய்திப் பிராற்குரை செய்வன்
என்று நினைத்(து) ஏகுறும் நெறியில் இலங்கு
கனியொடும் இருந்த மதுவனம்
உற்ற தோழரொடு உறுபல மூலங்கள் உயர்சுவைத்
தேனொடு உண்டழித்திடலும்
உறுபகை இதுவெனத் ததிமுகன் எதிர்த்திடக்
குருதி பெருக உதைத்(து) ஒறுத்திடலும்
மற்றவன் முறையிட மாதினைக்கண்ட மகிழ்ச்சியின்
செய்தான் மறுவிலன் என்றிடப்
பெற்றதோர் பேறனே! சப்பாணி கொட்டியருளே!
பெறலரும் தவத்தோய் சப்பாணி கொட்டியருளே!

அஞ்சனை பெற்ற அருந்திறல் வீரா! அமரர் தலைவன் —9
அருள்பெறு பேறா!
தஞ்சம் எனவே தம்மிடம் வந்தவர்க் கபயம் அளிக்கும்
தனிப்பெரும் தகையே
அஞ்சன வண்ணன் ஆட்கொள்ளும் தேவா! அம்மையின்
துயரைப் போக்கிய அண்ணால்!
பஞ்ச முகத்தவ! கொட்டுக சப்பாணி பாலரின் மேலவ!
கொட்டுக சப்பாணி!

பவக்கடல் உற்றேன் பல்லிடர் பெற்றேன் உறுதுணை —10
அற்றேன் கரை இதற் கிலையே
தவக்கடல் நீயே! தயாநிதி நீயே எனக்கினி இரங்கி
இன்முகம் பாராய்!
தவக்கமும் ஏனோ? தந்தைதாய் நீயே கலக்கமும் நீங்கிக்
காவல் செய்திடுவோய்!
பவக்கடல் கடந்தவ! கொட்டுக சப்பாணி பஞ்சமுகத்தவ
கொட்டுக சப்பாணி!

## V. முத்தப் பருவம்

புணரி மேய்ந்து வான்வழிச் சென்று புடையமர் —1
குன்றின் முடிசொரியும்
கொண்டல் பொழிமுத்தும் பாளைவிரி பூங்கமுகின்
முத்தும்
துணர்மலி தீங்கரும் பீன்ற முத்தும் தொடுவேய் ஈன்ற
முத்தும்
துறுகடற் படுசங் கீன்ற துளங்கு முத்தும்
புணர்மடிப் பல்லாவின் பல்முத்தும் புதுமணப் பங்கயம்
பொதியும் முத்தும்
புனற்றலை உயர்மீன் ஈனும் முத்தும் முத்தல்ல
வணவிதழ்த் தேன்வடியும் கனிவாய் முத்தம் தருகவே!
புன்முறுவல் பூக்கும்
இன்கனி வாயின் இலங்கு முத்தம் தருகவே!

மண்குடை வராக மருப்பீனும் முத்தும் வளர்கதலி —2
முத்தும் மாதர் கந்தரம் பெருகுமுத்தும் படநா
கத்தின்
பண்புடை உச்சியுயர் முத்தும் பறக்கும் கொக்கின்
முத்தும் பாய்மதப் புழைக்கை யானையின்
கொம்பீனும் முத்தும் புனல்நிறை
தண்புனம் மருவுசாலியின் முத்தும் தருண மதியின்
முத்தும்
முத்தல்ல மழலையொடு மறையும் பெருகி நறை
யொழுகும்
பண்படும் நின்கனி வாயில் முத்தம் தருகவே! பல்கலை
பயிலும்
உன்னுடைப் பவள வாயின் முத்தம் தருகவே!

மடுப்படும் இடங்கர் மாமுதலை முத்தும் வன்பிடி —3
உடைய உடும்பின் முத்தும்

தடுப்பரு புனல்பெருகு கங்கை வீசும் அலையின் முத்தும்
தடநீர் உந்தும்
கடுக்கையொடு காரகில் ஆரம் பெருகு காவிரிக்
கரைமுத்தும் பாண்டியன் கடற்கரைப்
படுக்கும் முத்தும் முத்தல்ல அருவாயின் முத்தம் தருகவே!
கனிவாய் முத்தம் தருகவே!

மூவா அமரர் பதிக்கிறைவன் முறையிற் பெற்ற —4
சிந்தாமணியும்
ஓவா நிதிபெறு உயர் அளகைக் கோமான் படைத்த
ஒளிமணியும்
பூவாழ் பொன்மகள் பொலிமார்பின் மாயோன் மணியும்
மணியல்ல!
பாவார் வாய்முத்தம் தருகவே! பவளவாய் முத்தம்
தருகவே!

அடுக்கிய நாள்பல அருந்தவம் இயற்றி —5
ஆராத காதலின் நோன்புகள் ஆற்றினேன்
ஒடுக்கிய புலனொடு உறுநீர் பலவாடி
ஒருத்தனைத் தலந்தொறும் உணர்வொடும்
ஏத்தினேன்
விடுக்கிய தீவினை பலவும் விட்டிலேன்
விளங்கிய நின்திரு அருள்பெற விழைந்தேன்
மிடுக்கிய நடையாய்! மிளிர்வாய் முத்தம்
தருகவே! கனிவாய் முத்தம் தருகவே!

படமுடியா தினித்துயரம் பட்டதெல்லாம் போதும் —6
பருவரலைக் கண்டும்நீ வாளா இருப்பையோ!
விடமுடியா துன்கழல்கள் வெற்றிபெறும் நின்வலிமை
வேறுபல வினைகாட்டும்! முன்னொருநாள்
தோழருடன்

தடமுழையின் ஊடுசென்று சுயம்பிரபையின் தன்சாபம்
 படவருளிப் பழையஉருப் பெறநின்றாய் ஆதலினால்
கடனறிந்து கனிவாயின் முத்தம் தருகவே !
 நறவொழுகும் பவளவாய் முத்தம் தருகவே !

கரிய உருவிப் பெரிய வரையை நிலையின் திரியப் —7
 பெறுந்திறல் காட்டினை !
பரிய உருவொடு படரும் அரக்கியர் கொடிய நரகுற
 வன்பொடு வாட்டினை !
திரியும் தொழிலுள சுரசை உடலில் புகுந்து தெரிதர
 வெளி வந்தனை !
அரிய கனியிதழ் முத்தம் தருகவே! அருமை பெருகுற
 முத்தம் தருகவே !

இரவும் பகலும் இடையும் இலையென அசுரர் பதிதனை —8
 அருமையின் காத்த
பரவும் முடிபெறு பவள மலையதில் வலம்பெறு இலங்கினி
 வாடுறத் தாக்கி
கரவின் நகரதில் மருவும் வழியினைக் கற்றிடும்காலின்
 கான்முளை ! கனிவாய்
பரவும் முத்தம் தருகவே ! பவள இதழ்வாய்ப் பெருகும்
 முத்தம் தருகவே !

குயிலும் மயிலும் குரலும் வடிவும் பெரிதும் முறியும் —9
 திருவின் அஞ்சனை
துயிலும் உணவும் மடியும் ஒருவிச் சொரியும் அருளில்
 வளரும் அநுமா !
உயிரும் உடலும் புலனும் உணர்வும் உருகும் அளவின்
 முத்தம் தருகவே !
பயிலும் குலிசப் படையன் பதியின் வளர்வாய் வடிவாய்
 முத்தம் தருகவே !

கதிரும் மதியும் கலந்து பொழியும் அழகும் அருளும் —10
அமரும் முகனே!
எதிரும் புறமும் புடையும் எங்கும் அருளும் பொழியும்
அன்பின் விழியாய்!
முதிரும் நறவும் மழலை மொழியும் நிறையும் கனிவாய்
முத்தம் தருகவே!
உதிரும் மணியின் ஒளிரும் மொழியின் பவள வாயின்
முத்தம் தருகவே!

## VI. வாரானைப் பருவம்

அம்பொற் குயின்ற அரிக்குரற் கிண்கிணி அருமணிப்
பரல்பெறு சிலம்பொடு கிண்கிணென —1
வம்பர் வடித்த சதங்கையுடன் ஞாண்காசும் வடிவார்
அறையில் கலின்கலின் என்னக்
கொம்பர் பறித்த பூவின் தொடையல் குலவும் மார்பின்
ஆரமொடு பொலிய
இம்பர் களிப்ப வருகவே! ஏழைக் கிரங்கி எளிதின்
வருக வருகவே!

பங்கயச் சீரடி பெயர்த்தொறும் பதும ரேகை காட்டப் —2
பதித்த சுவட்டினில் பல்வகை வண்ணங்கள்
பாங்குடன் பொலிய
அங்கணைக் காலிற் கழலும் அம்பொற் சிலம்பும் அருமணி
காலும் நிலவென ஒளிகால ஞாணின் காசும் பரந்த
துங்க மார்பின் ஆரமும் பல்கதிர்த் தோற்றமென
வெயில்வீசத்
தொடுகுழையும் நெற்றிப் பட்டமும் உச்சிச்
சுட்டியுடன் மிளிரச்
சங்கத் தமிழ்க்கும் சார்வட மொழிக்கும் தலைவா
வருகவே!
தாழும் அடியேம் குலம்விளக்க தயையாய்
வருக வருகவே!

கலிப்பகை தீர்க்கும் கருணைக் கடலே வருக! —3
காட்சிக் கெளிய கவினுறு மணியே வருக!
சலித்தவர் தமக்குச் சாரும் துணையே வருக!
சான்றவர் உளத்தில் ஆரும் தனிவிளக்கே வருக!
வலித்தெமை வாட்டும் வல்வினைப் பகையே வருக!
வாடாத் தவத்தின் வளரும் மலையே வருக!
ஒலித்திடு நாமம் 'இராமா' என்றுணர்ந்தாய் வருக!
உயர்பதம் உவப்பின் ஈவாய் வருக வருகவே!

பகைபடு தசமுகன் பனிமலர்த் தேவியைப் —4
பாயிருள் அசோக வனத்திடை வைத்தலும்
தகைமையின் தனியிடம் தாயினைக் கண்டு
அவள்துயர் ஆழியின் அமைவுற நீக்கி
வகைபடு மரங்களும் வளர்படை வீரரும்
அழிபடச் செய்து அவ்வூரின் மறுகெலாம்
புகைபடு தீயெழ ஒறுத்தாய் வருக!
பொன்னடி பெயர்ந்து வருக வருகவே!

கடலாடை புடைசூழும் காசினிக்குள் கதிரவன்தன் —5
சுடர்க்கதிரால் பனிநீங்கும் கவியிருள் போகும்
மடலார்ந்த பங்கயம் மலரும் பல்லுயிரும் தொழில்செய்யும்
மடிகொண்டு வாடாமல் வளரும்
தடமதியம் பொழியமுத கிரணத்தால் தருமுதல
செடிகொடியோ(டு) எவ்வுயிரும் தழைத்தோங்கி
வளம்பெறுமால்
அடலிருவர் தகைமையும் அடைந்தவ வருகவே!
அருந்தளிர் அடிபெயர்த்து வருக வருகவே!

பாவைகள் அவையியக்கும் பதியின்றி ஆடுமோ? —6
பல்லுறுப்பும் இதயமது பயனற்றால் தொழிலுறுமோ?
பூவையும் புணர்சிறையில் பொலிகுரலிற் பேசுமோ?

புனலின்றிப் பூம்பயிர்கள் புவனிதனில் பொலியுமோ ?
காவலர் கண்ணுறங்கின் காசினியும் களியுறுமோ ?
கருணை வள்ளல் நீஇலையேல் கதியேது ?
பாவலர்தம் படைநிதியே பண்புடன் வருகவே !
பளகறுநன் மாணியே வருக வருகவே !

உடன்பிறந்தான் உலகாளப் பெற்றிலனே எனமாழ்கி —7
உறுதாயர் உரைத்தனவும் உள்ளத்தில் ஓராமல்
தடங்கங்கைத் தனியாறு தாண்டித் தண்டகக்கான்
தனையடைந்த தனியரசைக் கண்(டு) அவன்
சொற்றமுறை
இடமகன்ற மேதினியை இணையில் அரசியற்றிக்
குறிநாளில் கூடாத தன்மையினால் எரிபுகுங்கால்
கடம்பூண்ட காவலனைக் காத்தவனே ! வருக !
காலையிளம் பரிதியென வருக வருகவே !

பல்லுயிரும் படைஉலகும் இயங்குனவும் அற்றனவும் —8
படையூழிக் காலத்தில் பரந்தஉருக் கொண்டோங்கும்
நல்லாலின் இலைஉறங்கும் நாராயணன் தன்னிடத்து
ஒடுங்குமெனும் உரையைப் பெரிதும் பொய்யாக்கிப்
பல்லூழிக் காலமெலாம் பண்புடனே வாழ்வையென
பரமன் அருள்பெற்ற பாலகனே வருக !
எல்லாமும் அல்லதுமாய் இருந்தபடி இருந்துகாட்டும்
வல்லாண்மை பெற்றவனே ! வருக வருகவே !

கல்லாரும் திணிதிண்டோள் வீமனெனும் காளை —9
கனைத்தேறிக் கல்லதரில் உற்ற ஞான்று
மல்லாரும் வண்புயமும் திண்ணுடலும் நிறைந்தபெரும்
மூப்புருவின் வழிமறித்து நீபடுத்துக் கிடக்கப்
பொல்லாத பலசொல்லிப் பொருசமரம் கருதியிடப்
புல்லாண்மை எனக்காட்டி புகலிடமும் அருள்செய்த

வல்லாள ! வருகவே ! வழித்துணையாய் நின்றவனே !
திருவடி பெயர்த்து வருக வருகவே !

மறுவினை மறுவில தெனும்படி கூட்டியே புதுமணல் —10
பொலிந்திடப் புடையிற் சேர்த்தியே
உறுவிழி படுமிடம் எங்கணும் உறுபுனல் விரையொடு
ஊற்றியே விழைதரு காட்சியில்
உறுபொடி காவியும் தீற்றியே கதலியும் கூந்தலும்
கழையுடன் கட்டியே தன்னிழல்
உறுபந்தர் மேடையும் இட்டனம் உயர்நடை யொடு
வருகவே! உலகுதழைக்க வருக வருகவே!

## VII. அம்புலிப் பருவம்

வண்டுபடு நறுந்துளப மாயவனை அடுத்திடலால், —1
மாநிலத்து மன்னுயிர்கள் மகிழ்வுடன் வணங்குதலால்
பண்டுபடு கலையெல்லாம் பழுதறவே பெற்றுளதால்,
படர்வான வீதியினில் படர்ந்து போதலால்
கண்டுபலர் கைக்கமலம் கும்பிடப் பெறுதலால்,
கனிகுலுங்கும் சோலையினுள் கருத்துடன் சேரலால்
தொண்டனிவன் தனையொப்பை அம்புலீ! ஆடவாவே!
தோன்றாத் துணைவனுடன் அம்புலீ! ஆடவாவே!

உலகுதொழு முனிபுங்கவர் உறுசாபம் ஏற்றிடலால் —2
ஓதரிய அச்சாபம் ஒருவியிடப் பெறலால்
பலமாதி அரியனவும் பலர்கொடுப்பப் பெறுதலால்
பண்புடனே பல்லூரும் பாய்ந்து சுற்றலால்
புலனாதி கடந்தவர்க்குப் புனிதகதி அளித்திடலால்
புடையிருளை எவ்விடத்தும் மாற்றி யருள்வதால்
குலராமன் தூதுவனை ஒப்பை! அம்புலீ
ஆடவாவே! அழகுற அம்புலீ! ஆடவாவே!

பாகார் மொழிமாதர் பலரும்உனை அடுப்பர் —3
சிற்றின்பக் கடல்மூழ்கிச் சின்மதியும் கெட்டுநிற்பை
ஆகார் அவர்சிறிதும் அடுத்துவரும் காலமெலாம்
மாயாத மாணியென மறுவற்ற பெயர்பெற்றான்
ஏகாந்த இடங்கொண்டு இராமனையே ஏத்திநிற்பன்
இணையிலாத் தவவலியும் பெருமதியும் எய்துள்ளான்
மாகாமி உனிற்பெரியன் மதிகொண்டு அம்புலீ
ஆடவாவே! மாருதியுடன் அம்புலீ ஆடவாவே!

வானத்தின் மேலெழினும் வடிவத்தில் மாசுற்றாய் —4
வயங்குடலும் உள்ளமும் தூயன் இவன்காண்
மானத்தின் மாண்பின்றி மலிகலையும் தேய்வுற்றாய்
வளர்கலைகள் எந்நாளும் வற்றாத பெரியன் இவன்
ஊனத் திரவுமிக உலகந் திரிந்துழல்வாய்
இரவலரை எப்பொழுதும் காப்பான் இவன்காண்
மோனத் தவத்துனுடன் அம்புலீ ஆடவாவே!
முற்றும் அறிவனுடன் அம்புலீ ஆடவாவே!

குணதிசைப் பரிதியின் கூர்ங்கதிரின் வாடுவை: —5
மறையின் கிளம்புவை!
உணலுறு பழமென உறுகரம் கொள்வன்இவன்
அரவமது உனைவிழங்கும்
பணமணி பாம்பினத் துறுவிடம் இவன்போக்கும்
பன்மடங்கு உனிற்பெரியன்
குணமலை இவனுடன் அம்புலீ ஆடவாவே!
குறித்தம்புலீ ஆடவாவே!

மற்றாரும் உனக்கில்லை மாறாத கயரோகம் —6
வடிவாகும் உன்னுடலை வாட்டியது காணாயோ?
உற்றாரும் கைவிட்டார் உறுசாபமும் பெற்றாய்!
உடற்களங்கம் ஒருபொழுதும் உன்னைவிட்
டொழியாது

புற்றரவம் உனைச்சீறி புடையமர்ந்து நின்றுளதால்
புவனத்துக் கண்கண்ட தெய்வம் இவன்காண்
பற்றாக இவனுடன் அம்புலீ ஆடவாவே! பரங்கருணை
அநுமனுடன் அம்புலீ ஆடவாவே!

அரியென்றும் அரனென்றும் அயனென்றும் —7
அரும்தவங்கள்
ஆற்றினும் அருந்துயரம் உன்னைவிட் டகலாது
உரிமையுடன் இவன் அடைந்(து) உயிரினங்கள் எல்லாமும்
கதிபெற்று உய்ந்தனவால்! நீயும் இவன் வழிப்பட்டால்
பெரிதும் இடர்நீங்கிப் பீழையும் போக்குவையால்!
பெருவரமும் பெற்றின்ப வாழ்வுடனும் பொலிவையால்!
அரிஅன்பன் இவனுடன் அம்புலீ ஆடவாவே!
அகந்தை அழித்தவனுடன் அம்புலீ ஆடவாவே!

பேதை மதிகொண்டு பெற்றபெண்ணை
விட்டொழித்துப் —8
பெருமகத்தைச் செய்வனெனப் புக்க பெருந்தக்கன்
மாதை அகந்தையுடன் மதிக்காத தன்மையினால்
மாதேவன் சினம்பெற்று மறுதலையும் பெற்றனனாம்
பேதாய்! அம்மகத்தின் பெற்றதையும் மறந்தனையோ?
பெரியான் அவனச்சம் அநுமனும் பெற்றுள்ளான்
நாதனென நாடி அம்புலீ ஆடவாவே!
நாராயணன் துணைவனுடன் அம்புலீ ஆடவாவே!

பாசம் தலைக்கொள்ளப் பல்லவுணர் மாண்டனரால் —9
பாரில் பாவியெனப் பழிபலவும் பெற்றனரால்
ஆசை தலைக்கொள்ள அழிவுவந்து உற்றிடுமால்
அகந்தைக் கிழங்கதனை ஆழவேர் களைந்திடுவாய்
பூசல் புரிந்தமரும் புலத்தறிவும் விட்டொழிப்பாய்
பொல்லாத தீவினையும் புடையுற்றுக் கொல்லுங்காண்

வாச மலர்மாலை அநுமனுடன் அம்புலீ
ஆடவாவே! வாயுசுதனோடு அம்புலீ ஆடவாவே!

நதியும் அறுகும் மலரும் பெருகும் நளிறும் சடையின் —10
செறியும் புதரில்
வழியும் வரையும் நிலையும் குலையும் படியும்
சிறையும் பட்டு விழித்தனை!
அதிரும் நடையும் அமரின் நினைவும் கொலையின்
உளமும் புலையின் மனமும்
மலியும் கருகும் உடலும் படையின் செறிவும்
நிறையும் தசமுகன் வழிப்பட்டாய்!
பதியும் நிலையும் பகரும் பொருளும் குணமும் குறியும்
கொளுவும் மதியும்
சிறிதும் அரிதெனச் சீரும்பேரும் பெரிதும் அற்றுப்
பீழை உற்றாய்!
நதியின் துறையில் உறையும்பதியின் வதியும்
அநுமனுடன் அம்புலீ ஆடவாவே!
நறையின் மலியும் மலரின் மாலை புரளும்
அநுமனுடன் அம்புலீ ஆடவாவே!

## VIII. சிற்றில் பருவம்

நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமும் —1
நலனுற வளமுற வளர்க்கும் தாயர்கள்
தாளொடு தலைவரை துகளற நீராட்டி நறுவிரைத்
தூபமும் புகையுறக் கூட்டி
வாளொளிப் பூண்களும் வண்ணப் பட்டுகளும் சீருறச்
சேர்த்தி விளையாட விட்டார்
நாளொரு தோழியர் கட்டுறும் சிற்றில்லம் சிதையேலே!
தளிர்அடியால் சிற்றில்லம் சிதையேலே!

தோழியர் பலரும் தொகையாகத் தொடர்ந்துதிருத்தி —2
மண்ணாலும் செங்கற் குறையாலும்
ஊழியர் ஒருவரும் இல்லாமல் உலகினர் மெச்ச
இலங்கட்டிச் செப்பொடு பாவைகள்
ஊழுற வைத்துக் கூழும் சமைத்தனம் மாந்தளிர் மானும்
மலரடி கொண்டு
தாழுறச் சிற்றில்லம் சிதையேலே! சதங்கைத் தளிரடி
கொண்டெங்கள் இல்லம் சிதையேலே!

திருமேனி வாடுறும் சிறுநுதலில் வேர்வரும்பும் —3
சிற்றாடை மாசுறும் சீறடியும் நோவும்
பெருமேனிப் பெருந்தாயும் மனம்வருந்தும் பிள்ளைகளும்
நகைசெய்வர் பிறைமுகத்த தோழியரும்
நனிவருந்துவர்
பெருவேனில் பிழைசெயும் பெறுவையேல் கூழ்தருவோம்
பீடுபெறப் பெயர்ந் தருள்வாய் இந்திரபுரிக்
கருமேனிப் பெருமான் தூதாம் சிற்றில்லம்
சிதையலே! கழற்காலால் சிற்றில்லம் சிதையலே!

மாயா விகாரத்தால் மன்னுயிர்கள் எல்லாமும் —4
தன்னலமே பேணித் தரங்கெட்டு வாழ்வுறுவர்
வாயால் பொருள்நச்சி வாய்த்தபடி செயல்புரிவர்
வண்ணமாட கோபுரங்கள் வரைவின்றிப் பலஎடுப்பர்
பேயாரும் பெரும்பாழாய்ப் பீடழியும் போ தழுவர்
பெம்மான் கழலொன்றே பெருமைதரு நிலையென்று
சாயாத அன்புடையாய்! தளிரடியால் சிற்றில்லம்
சிதையேலே! சிறியரேம் சிற்றில்லம் சிதையேலே!

உடல்நடுங்க உயிர்நடுங்க உலகெல்லாம் திரிதந்து —5
கொலைசெய்து தசைதின்று ஒண்பொருளை வெளவும்
மடஅரக்கர் புரமன்று மநுமுறையில் பிறழ்ந்திட்ட
மன்னவர்தம் புரமன்று மாளாத காதலினால்

மடவாரைச் சிறைசெய்யும் மாபாவியர் புரமன்று
மகளிரேம் விளையாடும் சிற்றில்லம் மழகளிறு
நடந்தன்ன கழற்காலால் சிற்றில்லம் சிதையேலே !
நளின மலரடியால் சிற்றில்லம் சிதையேலே !

உண்ணாமல் உறங்காமல் வாடாமல் கோடாமல் —6
காகுத்தன் திருநாமம் கருத்திருத்தி உரைப்பாய் !
புண்ணாக என்னெஞ்சம் பொய்வீடும் அழிப்பாயோ ?
பொருகழற்கால் இராமன் தான் உனைத்தவறாய் எண்ணானோ ?
கண்ணாளன் காகுத்தன் திருநாமம் யாமுரைப்போம்
கருத்திருத்தி உன்னுருவம் கழலிணைகள் பூசிப்போம்
நண்ணார்போல் நடுவின்றிச் சிற்றில்லம் சிதையேலே !
நளின மலர்ச்சீறடியால் சிற்றில்லம் சிதையேலே !

மண்ணாசை பெண்ணாசை மற்றுமுள ஆசையெலாம் —7
நண்ணாத நாயகமாய்த் தனிநின்ற பெம்மானே !
மண்ணாலும் கல்லாலும் மனைகட்டி ஆடுகின்றோம்
மற்றுனக்கு எங்கள்பால் மதித்திடும் தொழிலேது?
விண்ணாரும் கொடியுயரும் வீதியுடை இந்திரபுரி
கண்ணாரும் காவலனே ! கருணையுடன் எங்கள்
பண்ணாரும் சிற்றில்லம் சிதையேலே ! பரலமைந்த
சிலம்பதிரும் சீறடியால் சிற்றில்லம் சிதையேலே!

முழங்கு குரலின் அரியேறோ மும்மதத்த மழகளிறோ —8
வடிவமர்ந்த
மழவிடையோ எனஉன்னி உனைப்பார்த்தோம்
வழங்குமழகு வடிந்தொழுகும் முகக்கவினை
மொண்டுள்ளோம்
திருக்கமலக் கரத்தழகும் திருவடியின்
வனப்புமுண்டோம்

புழங்குதெருவில் வந்தாரைப் பார்த்தால் புரையும்
உண்டோ ?
புகலும் கண்திட்டியும் பொருந்திப் புகுந்ததோ ?
தழங்குதூலச் சிலம்பணியும் சீறடியால் சிற்றில்லம்
சிதையேலே ! சீரார் சிற்றில்லம் சிதையேலே !

உலகம் படைத்துக் காத்தளிக்கும் ஒண்மலர்வாழ் —9
திருமா மகட்கும் திருமால் உறுதுணையாம்
அலகில் புகழான் கவியரசன் அருமைக்
காதல் மனையார்க்கும் அருமையுடன் வீடளித்தாய்
கலகம் விளைத்தால் கரையுண்டோ ? கடிதேகாய்
கயல்மீன் பிறழும் காவிரியின் துறைவாழ்
திலகா ! சிறியேம் சிற்றில் சிதையேலே !
திருவடி நலனற எஞ்சிற்றில் சிதையேலே !

மலையும் அமரில் மண்ணாளும் மன்னர் பலரும் —10
மாற்றாரின் புரத்து மனையழிப்பர்
குலையும் மனத்த கொடுந்தீயர் குறிக்கோள் முடிக்கக்
குலவும் பெருவீடழிப்பர்
அலையும் திறத்த பவனனும் அருமையின்றி அவைசெய்யும்
அங்ஙன் ஒன்றும் உனக்கில்லை
கலையின் வரம்பே கழற்காலால் சிற்றில் சிதையேலே !
சிறியேம் சிற்றில் சிதையேலே !

## IX. சிறுபறைப் பருவம்

கார்பெறு முழக்கென தண்பெறு தோகை —1
மயிலினம் மகிழ்ந்தாடப்
பார்உயர் தில்லைப் பதியின் படர்சடைக் கடவுளாட்டென
பக்தர்குழாம் மனங்களிக்கச்
சீர்பெறு வேதத் தொலியென சிறப்புடை
அந்தணர் கூடப்

பேர்பெறு சிறுபறை முழக்கியருளே ! பிறங்குறு
சிறுபறை முழக்கியருளே !

இன்புடைத் தமிழின் இசையெனப் புலவர் குழாங்கூடி —2
ஏத்தெடுப்ப
நன்மர மாங்குயில் ஓசையென நல்லார் வானுயர்
மாளிகை ஆடப்
பொன்னின் வளம்பெறு புரிகுழலார் இசையெனப்
புவனத்தினர் கூட
இன்குரற் சிறுபறை முழக்குகவே ! ஏர்தரு சிறுபறை
முழக்கியருளே !

பருகும் அழகுடைப் பசுங்கிளி மிழற்றெனப் பாவையர்
வியந்து களித்திடவும் —3
உருகும் மழலைய சிறாருடைச் சொல்லெனப் பெற்றவர்
ஓடிவரவும்
பெருகும் கடலுடை ஓசையெனப் பிரியும் விரகியர்
பேதுறவும்
மருவும் சிறுபறை முழக்குகவே! மாண்புறு சிறுபறை
முழக்கியருளே!

அழகுடைத் திருவடி அமரும் கழலின் ஓசை —4
ஒத்துவர, அணிபெறும் அரையின்
பழகுறு சதங்கையின் ஒலியுடன் அமரப் பவளம்
புரையும் இதழின் வடியும்
மழலையை மான தமிழின் தலைவா! சிறுபறை
முழக்கியருளே! வடமொழிக் கலையின்
அழகின் வரம்பே! அங்கை அருந்தளிர் வாடாமல்
பொற்புறு சிறுபறை முழக்கியருளே!

அண்டச் சுவர்கள் வெடித்துப் பொடியாமே —5
அடுக்கிய புவனங்கள் கீழ்மேல் ஆகாமே

கொண்டல் வானகம் குமுறி இடியாமே
குளிரிரவின் உடுக்கள் வெடித்துக் கீழுதிராமே
எண்டிக்கின் கயங்கள் பிளிறி ஓடாமே
இன்றளிர் விரல்நுதி சிவந்து களையாமே
அண்டர் நாயக! சிறுபறை முழக்கியருளே!
ஆனந்த உருவனே! சிறுபறை முழக்கியருளே!

வம்மின்னெனப் புலவரை அழைத்திடும் வண்கொடை —6
முரசமென வாளொடு வீரர்கள் கூடித்
தெம்முனை பொருதரும் வெற்றி முரசமெனத்
தென்புலச் சோழன் புகழ்கூறும் முரசமெனத்
தம்மின் ஒருவரும் தராதலம் இலரென
உன்புய வலியினை ஓதும் முரசமெனக்
கொம்மெனக் கொட்டுக சிறுபறையே! குளிரும்
காவிரி நாடனே கொட்டுக சிறுபறையே!

அணிதிகழ் இந்திர புரியதில் அமரும் —7
வரதனுக் கடுத்த விழவின் முரசமென
மணிதிகழ் வேலவன் மடப்பிடி வள்ளியை
வதுவை செய்திடு மங்கல மணமுரசமென
பணியமர் சடையன் பாண்டியன் மதுரையில்
பருப்பத மங்கையை மணக்கும் முரசமென
அணிவிரல் நுதியின் கொட்டுக அரும்பறையே!
ஆர்கலி மகிழ கொட்டுக சிறுபறையே!

மரம்பயில் கானில் மடநடை பயிலக் — 8
கன்றொடு பிடியமரும் காமர் மடப்பிடியே!
வரம்பெறும் இச்சையில் வான்மயில் சுற்றும்
வடிவமர் சாயல் பெறுமிள மஞ்ஞை!
குரல்பெறக் கிளிகள் கொடுந்தவம் செய்யும்
கொஞ்சும் இளங்கிளியே! அசோகம் அழித்த

கரங்கொடு கொட்டுக சிறுபறையே! கடையில்
அரக்கர் கலங்கிடக் கொட்டுக சிறுபறையே!

வானவர் தானவர் கலக்கிடு பாற்கடல் —9
தோன்றாத இன்னமுதே! வரையிலும் வனத்திலும்
கானவர் ஏனையர் காணாத உயர்தேனே!
கனிந்திடு பழத்தினும் கட்டியினும் உறுநறுஞ்சுவையே!
வானமர் பதியினும் வன்கதிர் வீசும்
தோளா மணியே! வரம்பெறத் தவம்புரி
மானவர் மகிழக் கொட்டுக சிறுபறையே
மகிதலம் குதிகொளக் கொட்டுக சிறுபறையே!

பகர்தரு சொன்மலர் பண்ணமர் தமிழினில் —10
பாங்குறச் செய்து பதமலர் சூட்டினேன்
நிகர்தரல் இலதென நெஞ்சம் நெக்குருகி
இருவிழி நீரினாலுன் இணையடி ஆட்டினேன்
இகல்தரும் ஐம்புலன் எறிந்(து) இதயத்து
ஏற்புடை அறுசுவை உண்டியும் படைத்தேன்
நகர்தரு வீதியின் சிறுபறை முழக்கியருளே!
நாடு வளம்பெறச் சிறுபறை முழக்கியருளே!

## X. சிறுதேர்ப் பருவம்

காயாத மரமுள கருணைப் பெருக்காறு —1
கரைபுரண்டு கனிபழுத்து நனிகுலுங்கும்
வாயாத புலனுமுள வருபுனலில் அணைதேக்கின்
வரப்புயர நீர்பாய்ந்து வளம்பெற்றுப் பலனளிக்கும்
சாயாத கருமமுள சலிப்பின்றி நனியூக்கி
அறிவோடு பாடுபடின் சமம்கண்டு பலனளிக்கும்
தாயான தனித்துணையே! சிறுதேர் உருட்டியருளே!
தமியேம் கலிநீங்கச் சிறுதேர் உருட்டியருளே!

பல்லுயிரும் பார்தனில் படைப்புப்பல பெற்றிடினும் —2
பல்வினையின் பாலாலே பயனதுவும் வேறுபடும்
நல்லறிவும் பெற்றிடினும் நாடுமொறு குறையுறுவர்
நலனழித்து நன்மனமும் கலங்கியே வாடுறுவர்
வல்லுநர்கள் வாலறிவால் வளர்வினையை மாற்ற
வடிவழகன் உனையன்றி வாய்த்தகதி வேறுண்டோ?
நல்லுலகம் நடந்தேறச் சிறுதேர் உருட்டியருளே!
திருவரை வளர்செல்வ சிறுதேர் உருட்டியருளே !

திருவோடு பல்வளனும் பெற்றபெருந் தசமுகனும் —3
திரிசமனால் பீடழிந்து திரும்பாத நிலைபெற்றான் !
கருவோடு பல்லினமும் கலக்கமுற அழிவுற்றான் !
காகுத்தன் அமர்வென்று துயர்க்கடலின்
கரைகண்டான்
மருவோடு மலர்க்கூந்தற் சானகியும் நிலையுற்றாள் !
கண்மணியும் அனையநீ மறுவற்ற வரம்பெற்றாய் !
தெருவோடு கொடியுயரும் சிறுதேர் உருட்டியருளே !
திருவரை வளர்செல்வ சிறுதேர் உருட்டியருளே !

உலையாத முயற்சியினால் உறுதவத்து மார்க்கண்டன் —4
ஊழின் வலிச்சிந்தி ஒருவாத வரம் பெற்றான்
குலையாத அன்புகொண்டால் குவலயத்துக் கூடாத
நிலையுமுண்டோ ? கொடையின் மடம்பூண்ட
கொள்கையில்
தலையாய உனக்கோர் விண்ணப்பம் ! தனிப்படரில்
தவிப்பேனைத் தயைசெய்து கருணையுடன்
கைதூக்காய் !
கலைவாணர் காவலனே ! சிறுதேர் உருட்டியருளே !
திருவரை வளர்செல்வ ! சிறுதேர் உருட்டியருளே!

உமையோடு உலகாளும் ஒருசிவனும் மகப்பெற்றான் —5
உயர்திருவும் ஒருநாகத் தணைவளரும் மாயவனும்
தமையளிக்கத் தருமைந்தன் பெறாமையால் தனியமர்ந்து
தவஞ்செய்யும் உனைக்கொண்டார் தக்கஒரு மகவாக
அமையாத ஆர்வமது பொங்கி அலங்கரித்து
அருந்தெருவில் அகமகிழ ஆடஉனை விட்டார்கள்
எமையாளும் இளையானே! சிறுதேர் உருட்டியருளே!
திருவரை வளர்செல்வ! சிறுதேர் உருட்டியருளே!

[illegible]வெம்பழல் எரியன்னப் பொடியாட வீங்குடலம் —6
வெதும்பி வாடக் கடுங்கோடை தீர்ந்துமாவின்
கொம்பேறிக் குயிலினம் கூர்ந்து பாடக் காமன் குளிரிளந்
தென்றல் தேரேறினன்
வம்பேறு மாலையுடன் வடிவேலன் தேரூர்ந்தான்
நம்பெருமான் தேரேறி நாடெங்கும் விழாக் கொண்டான்
அம்பொன்மணி அவையிழைத்த சிறுதேர் உருட்டியருளே!
அழகுவளர் அருஞ்செல்வ சிறுதேர் உருட்டியருளே!

எழுந்தோகை குடிகொள்ள அறமாதி தலையெடுக்க —7
எழுதா மறையும் ஆகமமும் வளர்ந்தோங்கக்
கொழுந்தேறி அவிப்புகையும் கொண்டலென வான்சூழக்
கோவில்களும் முறையோடு பூசனைகள் கொள்ளத்
தொழுந்தோகை மாதரினம் தூய நெடுங் கற்போங்கச்
சுவறாத அன்பின்மனம் கனிந்துருகிப் பொங்க
[illegible]ழுந்தோரணத் தெருவில் சிறுதேர் உருட்டியருளே!
சீர்வரை வளர் இளைஞ! சிறுதேர் உருட்டியருளே!

[illegible] ஆணவ இருட்கணம் விடுக்க —8
[illegible]ந்துளவும் விழைந்துலகம் போற்ற
பங்க[illegible]பாதகங்கள் நீங்கப்
பண்பற்ற காமமுதல் பல்பகையும் ஓட

எங்கணும் வழிபாடும் இருந்தவமும் ஒங்க
இன்கனியும் நறும்பூவும் கொண்டுன்னை ஏத்தத்
திங்கள்முகம் வியர்ப்போங்கச் சிறுதேர் உருட்டியருளே!
திருவரை வளர்செல்வ! சிறுதேர் உருட்டியருளே!

நிலையாத மனப்புனத்தில் நெருங்கிய புலக்காட்டைத் —9
திருநாமக் கோடரியால் தொலைத்தெறிந்து நின்கருணை
குலையாத நீர்பாய்ச்சித் திருப்பணியால் பண்செய்து
உரமான திடங்கொண்டு குணமென்னும் விதைவிதைத்து
கலையாத பொறைவேலி கட்டிமெய்ஞ் ஞானப்பயிர்
காத்துப் பேரின்பப் பலன்பெற்று வாழச்
சிலையோடு கொடிவீதி சிறுதேர் உருட்டியருளே !
திருவரை வளர்செல்வ சிறுதேர் உருட்டியருளே !

ஆவாழ்க அந்தணர் வாழ்க அருமறையும் —10
ஆகமமும் அறங்களொடு வாழ்க நினைப்பாடும்
நாவாழ்க நன்மலர் கொண்டுன்னைப் பணியும்
நலன்வாழ்க நாளுமுனை நினைநெஞ்சம் வாழ்க
கோவாழ்க குவலயமும் குறைவின்றி நனிவாழ்க
கோவிந்தன் திருவடி இணைமலர்கள் வாழ்க
பூவாழும் பொலன்மணிச் சிறுதேர் உருட்டியருளே !
பொலிநகர வீதியினில் சிறுதேர் உருட்டியருளே !

முற்றும்

## அநுமான் பிள்ளைத்தமிழ்

### கணபதி காப்பு

சிவகணங்களுக்குத் தலைவனாதலின் கணபதியா யிற்று. இடையூறுகளை ஆக்குபவனும் நீக்குபவனும் அவனேயாதலின் நூல் இனிது நிறைவேற அவனை முதற் கண் வணங்கிக் காப்புச் செய்துகொண்டார்; ஆதலின் 'கணபதி காப்'பாயிற்று.

சீர்(மை): அழகு, செல்வம், நன்மை, பெருமை முதலிய சிறப்புக்களையெல்லாம் குறிக்கும் ஓர் மங்கலச் சொல்லைக் கொண்டு நூலைத் தொடங்குகின்றார். பூத்த: ஆக்கிய; சீர்மையால் ஆக்கப்பெற்ற 'செம்மை' ஈண்டு நிறங் கருதாதுப் பண்பு கருதிற்று, செங்குட்டுவன் என்புழிப் போல.

பனி: மஞ்சு (fog). பனிப்படலம்: பனியாலாகிய தொகுதி.

வாணர்: வாழ் + நர்; இதற்கு இலக்கணம் வீர-சோழியம் சந்திப்படலம் 18ம் செய்யுளிற் காண்க.

சொல்வாணர்: சொல்லால் வாழ்நர்; புலவர்.

வரை: மலை. சிறப்புடைய மலைகளின் — 'இன்' உவம உருபு. 'மலைகளினும்' என்றும் காண்க.

ஏர்: அழகு; பூத்த: பொருந்திய. இமவான்: பர்வத ராஜன்; பார்வதியின் தந்தை. கொடி: உருவகம்; பார்வதி தேவி. 'மலையில் கொடி படர்ந்தது' என்றது கவி நயம். எந்தை: சிவபெருமான். நீர்பூத்தலாவது நீரிற் பூத்த என்றவாறு. நீர்பூத்த அண்டம்: கடல் சூழ்ந்த பூஉலகு.

நின்மல : மாசற்ற. சிந்தித்தலாவது எஞ்ஞான்றும் கருது தல். பார்பூத்த : உலகில் மலர்ந்த.

பரிதிகுலம் : சூரியவமிசம். பார்த்திபன் : மன்னன்; ஈண்டு இராமபிரான். அவன் துணைவன் எனவே அநு மனைக் குறித்தது. பாடுதமிழ் : வினைத்தொகை. 'தமிழ் தழையவே சிந்தைசெய்வாம்' என்று கூட்டுக.

குருவணக்கம்

சிலரால் : தமிழ் கல்லாதாராகிய சிலரே; பிரிநிலை ஏகாரம் தொக்கது. ஆல் — அசை. 'சிலரே இச்சீரியனான (தமது) குருவினைச் சிந்தையால் தேற்றாதார்' என்க.

பலரால் : ஆல் ஈண்டும் அசை. பலர் அருள் பெற்றார். குலராமன் : குலம் — நற்குடி; ரகுவமிசமாகிய நற்குடிப் பிறந்த இராமன். அவன் தூதுவன்: அநுமான். 'குலம் உயர' என்றது 'அவனைப் பாடுதலால் கவியாகிய தன் குலம் உயர' என்றவாறு.

பலராமன் : இந்நூலாசிரியர்தம் குருவின் இயற்பெயர். தாளிணைகள் — இணைத்தாள்கள் எனவேண்டிற்று முன் பின்னாகத்தொக்கது. பழிச்சுதல் : வணங்கிப்போற்றுதல்.

இந்நூற்கு உரை எழுதிவரும் அடியேம் இயற்றிய 'பாமாலை'யில் ஆசிரிய வணக்கமாக வந்துள்ள ஒரு பாட லிலும் *'குலராமன் திருநாமம் கனவானும் மறவாத, பல ராமன் பதங்களையே பலகாலும் பழிச்சுதுமே'* என்று போற்றியுள்ளமை ஒப்புக்காணத்தகும்.

## I. காப்புப் பருவம்

### 1. திருமால்

திருமால் காக்குங்கடவுளாதலின் காப்புப்பருவத்துத் தொடக்கத்தில் அவனை வழுத்துதல் மரபு.

பூ : தாமரை; மேவுதல் : பொருந்துதல். 'செங்கமலம்' — செம்மை நிறமுடைய தாமரை போன்றவள் என்று பெய ரளவில் நின்றது. 'பூவில் மேவும் கமலம்' என்றது நயம். வல்லி : கொடி. உவமத்தொகைப்புறத்துப் பிறந்த அன் மொழித்தொகை. 'சீதேவியும் பூதேவியும் இருபுடை நிற்க' என்றார்.

நாமேவு திருமொழிப்பாசுரம் : ஆழ்வார்கள் நாவில் பொருந்திய திவ்யப்பிரபந்தத்தின் ஒரு பகுதியாகிய திரு வாய்மொழி. பரவிட : பரவ நாகணை : நாகம் + அணை. விகாரத்தால் தொக்கது. 'நண்ணி நாகணை வள்ளலை' (கம்பராமா. அயோத்தி. 23) நாகம் : ஈண்டு ஆதிசேடன். அணை : படுக்கை. நாகமாகிய அணை. 'அணைமருள் இன்துயில்' கலி : 14. தேமேவு : தேன் பொருந்திய; இதனைக் கனிகளோடு கூட்டுக. தீங்கனி : இனியபழம். பாமேவு வன்மை பெறு பல்கலைக்குரிசில் : புலவர் பாடல் களால் சிறப்புப்பெறும் கலை; அன்றி அப்பாடல்களால் பெருமையடையும் குரிசில் என்க. பா—பாடுதல் தொழிலைக் குறிக்குமாயின், அநுமான் இசையில் வல்லவன் என்பதும் காண்க. குரிசில் : பெருமையிற் சிறந்தவன். பனித்தொடை யல் மார்பன் : மேகங்களை மாலைபோல மார்பில் அணி பவன். அநுமான் ஆகாயவழியே தாவிச்சேறலின் 'பனித் தொடையல்' அவனுக்கு மாலைபோலமைந்தது. தொடுக் கப்படுதலின் 'தொடை'; 'அல்' விகுதி மேல் விகுதி. அஞ்சனை சுதன் : அஞ்சனாதேவியின் மகன். 'இந்திரபுரி யமரும் குரிசிலை, மார்பனை, அஞ்சனைசுதனை ... மார் பன் காக்க!' என்று முடிக்க. ஏ : அசை.

## 2. சிவபெருமான்

அண்டம் : முட்டை வடிவானது; புவி. பகிரண்டம் : பிரபஞ்சத்திற்கும் புறம்பான வெளியையும் அடக்கியது.

'மல்லாண்ட தடக்கையாற் பகிரண்டம் அகப்படுத்த'— பெரிய திருமொழி : 11, 6, 2. அரற்றியிட : வருந்திக் கூவி முறையிட; ஊடு : இடையே; கயம் : யானை. அற்றவையும் : முழுவதும். 'வானூடு ... பறந்து சென்று... வயிறு நிறைந்தது' திரிபுராதியர்க்கு. அமரர் : தேவர். கடிதின் : விரைவாக. அரி அயன் : விஷ்ணு பிரம்மாக்கள். அருகு வந்தது அம்பாகவும் தேரோட்டியாகவும் திரிபுர சங்கார காலத்தில். அட்ட மூர்த்தி : சிவபெருமான். புவி, நீர், அக்நி, வாயு, ஆகாயம், சூரியன், சந்திரன், இயமானன் என்னும் எட்டு உருவில் விளங்குபவன். 'வரும் அட்ட மூர்த்தமாம் வாழ்வே' (கந்தர்கலி : 65). அட்ட மூர்த்தி : விளி. 'அற்று விழ (வீழ்வதை) ... கண்கண்ட தெய்வமாம் அட்டமூர்த்தி! (நீ) ... அநுமனைக் காக்க' என்று கூட்டுக. 'கண்கண்ட'வில் மூன்றாவது விரிக்க. கால் : வாயு. அநுமான் வாயுபுத்ரனாதலின் 'காலின் மைந்தன்'.

## 3. பார்வதிதேவி

சரம்+அசரம் = சராசரம்; தீர்க்க சந்தி; இயங்குவனவும் நிலையாயவையும். அகவயிற்றின் : வயிற்றின் அகத்தில் என்று மாறுக. அழகன் : சிவபிரான். பரம் : பாரம். 'மிசைப் பரந்தோண்டாது' (புறம். 30). ஆரம் : சந்தனம். தென்னாடாதலின் அகிலும் ஆரமும் அடவியில் உண்மை கூறினார். முகில் : மேகம். பதியும் : தங்கும். 'முகில் பதியும் மாடம்' என்றது அதன் மிகுந்த உயரத்தை உயர்வு நவிற்சியாகக் கூறியது. முறை — கட்டடக்கலையிற் கண்டவாறு. இராமபிரானுக்குப் பகை நகரமாதலின் இலங்கை 'முரண்' நகராயிற்று. தேவி : சீதாப்பிராட்டி. கண்டனன் : வினையாலணையும் பெயர் — அநுமான். 'கண்டனனைக் காக்கவே... இதுவும் (உனக்குப்) பரமோ?' என்று கூட்டுக.

## 4. விநாயகக் கடவுள்

பொன் கொழித்து : காவிரிக்குப் பொன்னி என்பதும் பெயராதற் காரணம் கூறினார். சாலி: நெல்; கதலி : வாழை. இருடியின் கரகங்கவிழ்ந்ததால் பாய்ந்த நீர் காவிரியாயிற்று என்பதைக் 'கரகங்கவிழ்ந்த காவிரிப் பாவை' என்னும் மணிமேகலையுட் காண்க. (மணி : பதிகம், 12). அவ்வாறு பொலியச்செய்தவன் யானை முகக்கடவுள் என்பதோர் வரலாறு. கோடு : கொம்பு. இரும் : பெரிய. மும்மதம் : மதயானைக்கு மும்மதம் 1. கன்ன மதம், 2. கை மதம், 3. கோச மதம் என்பவை. 'பொழிந்திழி மும்மதக்களிற்றின் மருப்பு' என்றார் தேவாரத்துள்ளும். மும்மதத்தைப் பற்றிய கீழ்க்காணும் குறிப்பு கருதத்தக்கது : ஆனைமுகக் கடவுளை மும்மதத்தன் என்றது பொருந்தும் என்றல் : ''யானையுறுப்புக் கருத் திற்கு மேலன்றியின்மையான் மும்மதத்தனாதல் யாங்ஙனம் என்பார்க்கு ... பஞ்சாக்கரத்தின் பேதமாகிய எட்டெழுத்து ஆறெழுத்து நாலெழுத்து முதலியனவும் பஞ்சாக்கரமென வழங்கப்படுமாறு போல மும்மதத்தின் வகையாகிய ஒரு மதமும் இருமதங்களும் மும்மதமென வழங்கப்படுமாதலின், அதுபற்றி ஆசங்கையென்னை?'' (சிவஞான சித்தியார், காப்பு : சிவஞான முனிவர் உரை). நால்வாய் : நாலுதல் — தொங்குதல்; 'தொங்குகின்ற வாயாகிய துதிக்கையை யுடையவன்' என்றவாறு. வாயாய் : வாயையுடையாய். பொன்னகரம் : இலங்காபுரி. தீயின் : தீயால்; உருபு மயக்கம். திறலன் : வன்மையையுடையோன். திறலன் அநுமன் — திறலனாகிய அநுமன்; இருபெயரொட்டுப் பண்புத்தொகை. புரிந்து : விரும்பி; அறிந்து எனலுமாம். 'நால்வாயாய்! அநுமனைப் புரிந்து நீ காக்க' என்க. 'ஒரு கோட்டு இருஞ்செவி மும்மதத்து நால்வாய்' என்ப

மாகேசுவரி. கடாவுதல் : ஏறி நடாத்துதல். தேர்ந்தவள் கௌமாரி. பார்ப்பவள் நாராயணி. பூண்டவள் வாராகி, குலிசம் : வச்சிராயுதம். களிறு; யானை; ஈண்டு ஐராவதம். பெற்றவள் இந்திராணி. வரை : மலை; 'வரைபோல் உயர்' என்று உவம உருவு விரிக்க. மகிடம் : எருமை. உற்றவள் காளி. மருவுதல் : பொருந்துதல். 'அன்பு' பொருந்தி என்க.

### 10. தேவர்களும் முனிவரரும்

நாமம் : பெயர். கருநாமம் : கெட்டபேர். கான் முளை: கால் — காற்று, காற்றின் மகனாதலின் கான் முளை என்றார். கான் முளை — மகன். தேவர்கள் : முப்பத்துமுக் கோடி தேவர். முனிவரர் : சப்தரிஷிகள்.

## II. செங்கீரைப்பருவம்

### 1

செங்கீரை : இப்பருவத்தில் குழந்தை தனது ஐந்தாவது மாதத்தில் தன் தலையை நிமிர்த்தி அசைந்தாடுதலைப் போற்றுதல் மரபு. செந்நிறமுள்ள கீரை காற்றில் நிமிர்ந்து அசைந்தாடுதலை ஒப்புமை கண்டு பெயர் பெற்றது இப்பருவம். புகைபோடுதல் கேசம் நறுமணத்தோடு உலர்தற்கு. ஏர் : அழகு ; ஈட்டுதல் : சேர்த்தல். சூழியம் : உச்சிக் கொண்டை. பரிபுரம் : சிலம்பு. தாய் : ஈண்டு அஞ்சனை.

### 2

கோலம் : அழகு. நறு : நல்ல மணமுள்ள. சுட்டி, காதணி, குண்டலம் : அணிவகைகள். திவண்டு ; துவண்டு. திவள் — பகுதி, 'திவள அன்னங்கள் திருநடைகாட்டுவ'

(கம்பரா. பம்பை 18). பரிபுரம் : சிலம்பு. இருக்கு ஓல் இடு பரிபுரம் : பிறர் அணியும் சிலம்புகள் போலல்லாமல் இவன் காற்சிலம்பொலி வேத இருக்குக்களின் ஒலியே என்பார் 'இருக்கு ஓலிடும்' என்றார். ஓல் : ஓலம், ஒலித்தல். இரட்ட : மாறிமாறி ஒலிக்க. இதழ் : உதடு. 'அழகு உமிழ்ந்து' என்னும் சொல்லாட்சியின் அருமை காண்க. செருக்கு : பெருமிதம்.

3

அஞ்சனை : அநுமனின் தாய்.

தோள் : அத்தாயின் தோள். பிறங்கு : விளங்கு. கருதரிய : கதிரவனின் கல்வி அறிவு, நேர்மை, ஒளி, வெப்பம் என்பவற்றைக் கருதியறிதலும் அரிது என்றார். பணி : பாம்பு. பணி கொள் அப்பழம் என : சூரியனை இராகு பற்றியதால் அப்பகலவனை ஓர்பழம் என (மயங்கி). நாகத்திடம் உள்ள மணி போன்ற பழம் எனலுமாம். தாவும் : எட்டிப்பிடித்தற்காகத் தாவும்.

4

பரிதி : சூரியன். பனி : குளிர்ச்சி. மதி நிலவு : மதியின் நிலவு. நிலவு போன்ற நகை. எரிமணி : நெருப்புப் போல ஒளி வீசும் இரத்தினம். மணி ... குழை : இரத்தினம் பதித்த காதணி சூரியனைப் போலப் பிரகாசிக்கவும், நயனங்கள் தரும் அருள் நிலாப் போலத் தண்ணொளி பரப்பவும்; பானுமதி இணைந்திருந்தவாறு கற்பித்தார். சுருதி : வேதம். சுரும்பு : வண்டு. ஆர் பகுதிப் பொருள் விகுதி. 'சுரும்புமூசாச் சுடர்ப்பூங்காந்தள்' (திருமுருகு. 43). 'இசையெனப்பாடும்' என்க. இருநிலம் : பெரிய நிலம். 'இருகையும் இசைந்து' என்க.

10

அண்டம் : பூமி. கால் : காற்று. ஆகாயமார்க்கத்தில் கடலைக் கடத்தலால் 'காலினும் செல்வை' என்றார். அநுமான் எவ்வுருவினையும் பெறும் ஆற்றல் பெற்றிருந் தான். காணாத : காண இயலாத. அரு : உருவமற்றது. அண்டர் : தேவர். வரத்தை : வரத்தினையுடையை. அரு மந்த : அருமருந்தன்ன; நீக்கற்கரிய நோய்களையும் நீக்கவல்ல மருந்து போன்ற என்று விரித்துப் பொருள் காண்க. தூத : தூதுவனே.

## III. தாலப்பருவம்

இப்பருவத்தில் குழந்தையாகப்பாவிக்கப்படும் பாட்டு டைத் தலைவனைத் தாலாட்டுதலைக் கூறுப.

1

தெங்கின்பழம் : தேங்காய். உயர்ந்தது தெங்கு. வருக்கை : ஒருவகைப் பலா. தேனுற்று : தேன் போன்று. தேமாங்கனி : தேன் சுவையுடைய மாம்பழம். கதலி : வாழை. கான் : காடு. காவிரித்துறைப் பதி : காவிரிக் கரையில் உள்ள நகரம். வளி : காற்று. ஈண்டு வாயு தேவன். மைந்தன் : குமாரன்; வலிமையுடையன் 'வானுற் றுயர்ந்த... காவிரித்துறைப் பதி'... இவ்வர்ணனை 'காய் மாண்ட தெங்கின்' என்று தொடங்கும் சிந்தாமணியுள்ளும் காண்க.

2

இளங்கற்றெருமை : இளங்கன்றையுடைய எருமை. நனைத்தில்லம் : இல்லம் நனைத்து என்று மாறுக. இந்திரபுரி, மருதம் மலிந்த, சோறுடைய சோணாட்டில், உள்ளதால் அதன் செல்வச் சிறப்பை விளக்குகின்றது இப் பாடல். விறல் : வெற்றி மற்றும் வீரம்.

3

பொரு : நிகர். புறநகர் : நகர்ப்புறம் என மாறுக. Suburb செல்வ மிகுதியைக் குறிக்கப் பொற்பந்தும் மணித் தேரும் கூறினார். மணித்தேர் என்புழி மணிகள் (bells) கட்டிய தேர் எனலுமாம். செல்வ மிகுதியை உயர்வு நவிற்சியணியால் குறிப்பிட்டதற்கு 'உற்றவர் கோழி மேலெறிந்த வொண்குழை' (சிந்தா. 89) முதலிய ஆட்சி கள் காண்க. கருத்துன்பம் : கருவிலே இருந்து சென்மிக் கும் துன்பம். துன்பத்தின் கரு எனலும் ஆம். வளி வழங் குதல் : காற்றடித்தல். கால் : வாயு. கான் முளை : மகன்.

4

விரை : வாசனை. கடவுளர் துணை கூவுதல் குழந் தைக்கு அருள்புரிய வேண்டி. திட்டி : திருஷ்டி; கண்ணீடு. இழுது : வெண்ணெய். இழை : ஆபரணங்களைக் கோக் கும் நூல். பணி : ஆபரணம். 'பணியெலாம் பணியதாகி' (கந்தபு. ததீசி யுத்தரப்படலம் 106). தொழுதகை: தொழத் தக்கவன்.

5

அநுமனை மகனாகப் பெறுதற்கு அவன் தாய் அஞ்சனை செய்த நன்மைகளைத் தெரித்துக் கூறுகின்றார் இப்பாடலில். புனல்: புண்ணிய தீர்த்தம். பதி : க்ஷேத்ரம். தானங்கள் : முப்பானிரண்டு அறங்களும் தானங்களேயாம். (காஞ்சிப் புராணம் : தழுவக்குழைந்த படலம் 138-141). வந்தவர் : விருந்தினர். ஐம்முகத்தாய் : அநுமனுக்குக் குரங்கு, நரசிம்மம், கருடன், வராகம், குதிரை ஆகிய ஐந்து முகங்கள் கூறுவர். அப்போது அவன் பெயர் பஞ்ச முக ஆஞ்சநேயர் என்பது. சதகண்டன் உதிரத்தில் பிறந்த

சதகண்டர்களை வதைக்க அம்முகங்களைக் கொண்டனன் என்பது புராணம்.

6

இதழ் : உதடு. அஞ்சனம் : கண்ணிற்கு மை. உரைத்தல் : மாற்றுப்பார்ப்பதற்காக உரைகல்லில் உரைத்தல். பொன்னின், மணியின் — உருபு மயக்கம். பொன்னால், மணியால் என்று கொள்க. குயின்ற : செய்யப்பட்ட. அடி, கரம் : அடியும் கரமும்; உம்மைத்தொகை. பொன்னித் திருப்பதி : திரு இந்திரபுரி.

7

இடர்: துன்பம். ஓதரு மறையை : அதன் பெருமையை ஓதி அளவிடுதல் அரிது என்க. அடங்க : முற்றிலும். பரிதி : சூரியன். பழம் என்று கருதிப்பாய்ந்ததனால் 'பறித்தல்' கூறினார். விறல் : வீரம். வித்தகன் : பேரறிவாளன். வித்தகன் தூதன் என்றும் பொருள் படுமாதலின், தூதரிற் சிறந்த ராம தூதனை வித்தகன் எனலும் பொருந்தும் என்க. மலம் : குற்றம். விளக்கு : ஒளிதருவது; ஈண்டு மெய்யறிவு என்னும் ஒளி. உருவகம். பண் : ராகம். பண்ணைப் பாடற்கு ஏற்றுக. பாடலையுடைய (பெற்ற) பழம்பதியான இந்திரபுரி என்றவாறு.

8

கள்ளோடு உறவு கொண்டு என்றேனும், கள்ள உறவு கள்ளுறவு என்று நின்றது என்றேனும் கொள்க. புனற்பதி : ஆற்றங்கரையில் அமைந்துள்ள நகரம்.

9

திரு : மகாலக்ஷ்மி; ஈண்டு சீதாப்பிராட்டியார். நாயகன் : இராமன். திருடு : கள்ளத்தன்மை. தீய : அழியு

மாறு. மலம் : ஆணவம், கன்மம், மாயை என்னும் மும் மலங்கள். 'மயக்கமாயதோர் மும்மலப்பழவல் வினைக்குள்' (திருவாசகம் : 30, 7). பவம் : பிறப்பு. 'பவத்திறம் அறு கெனப் பாவை நோற்ற காதை' (மணி : 30). இருந்தவம் : பெரிய தவம் : எப்போதும் பிரமசாரியாயிருக்கும் தவம்.

10

கணை : அம்பு. கார் : மேகம்; அதன் நிறமுடைய இராமபிரான். கான்மலர் : அவன் பாதத்தில் வீழ்ந்த அர்ச்சித்த பூ. (பவக்கடலைக் கடக்க) வழித்துணை என்க. தோன்றாத் துணை : பிறரறியாமல் உதவுவோன். பணை : யாதொன்றினும் சிறந்த மற்றொன்று. பணையில்லாத பொலிவுடைய பதி என்க.

## IV. சப்பாணிப் பருவம்

சப்பாணி : சக+பாணி; இணைக் கரங்கள். இது குழந்தையைக் கைகொட்டி விளையாடுமாறு வேண்டும் பருவம்.

1

கா : சோலை. பசுமை+கிளி=பைங்கிளி. 'பைங்கிளி' என்பது 'ஈற்று விகுதிபோய் இடையுகரம் சகரத்தொடு கெட்டு வருமெழுத்துக்கு இனமிகுந்து அடி அகரம் ஐகார மாயிற்று' என்னும் இலக்கணத்தாற் பெறப்படும். (நன். சங்கர நமசிவாயர் உரை, சூத்திரம் 136).

கலாபம் : தோகை. பார்ப்பு : பறப்பவற்றின் இளமை. (தொல். பொருள். 559).

செங்கமலம் : தாமரை போன்ற கைகள்; குவளை : நீலோற்பலம் போன்ற கண்கள். விளையாட்டில் கைகள்

கண்களை மறைப்பது, தாமரை குவளையை மறைப்பது போன்றது என்று உவமித்தார். 'மறைத்ததென்ன' எனற் பாலது 'மறைத்தென்ன' என்று தொக்கது. உவமையணி. வாமம் : அழகு. வாமர் என்றது ஈற்றுப் போலி.

2

சிறுவண்டி : சிறுவர்கள் விளையாட்டிற்கானது. சில் வரிய : சிலவாகிய வரிகளையுடைய. சிறகர் : ஈற்றுப் போலி (நன் : சங்கர. உரை 122.) ஒல் : பொருந்து. ஒல்லுதல் : மணிக்கட்டுக்குப் பொருந்துதல். வளைய : வளைகளை உடையவாய. வளை : முன்கையில் அணிவது. வளைந்திருத்தலின் வளையாயிற்று.

3

உருவளர் : தோற்றம் மிகுந்த. ஆடி : கண்ணாடி. மழ : இளமை (தொல். சொல். 311.) மழ இளம் : ஒரு பொருட்பன்மொழி. தரு : கற்பகத் தரு. வேண்டியவெல் லாம் ஈதலால் கற்பகம் உவமை. தமனியம் : பொன்.

4

பார்வை : கண்ணீடு. படுதுயர் : மிக்கதுயர். சல்லியம்: மாயவித்தை; சலம் : மிகுந்தவெகுளி. 'சந்திரற்குவமை சான்றவதனத்தாள் சலத்தை நோக்கி' (கம்பரா. மாரீச. 240). கொல்லிய : கொல்லும் பொருட்டு. செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். விடம் : நஞ்சு. ஊன மிகுதியைக்காட்ட 'குறைபடு ஊனங்கள்' என்றார். மணிக்கரம் : மணிக்கரம் கொண்டு' என்று நிரப்புக.

5

பெருகு எழிற் பேதையர் : எழில் பெருகு பேதையர். பேதையர் : மகளிர்க்கு ஓர் பொதுச்சொல். மால் : விஷ்ணு.

### 6

அவுணர் : அசுரர். குணகடல் : கீழைச்சமுத்திரம். தமரில் : தம்மவரில், தக்க : உயிரை அளிக்கத்தக்க. மலை : சஞ்சீவி பர்வதம். அமர் : போர். ஆழி : சக்ராயுதம். நாயகன் : இராமபிரான். பமரம் : வண்டு. பசுமை + துணர் : பைந்துணர். துணர் : பூங்கொத்து. துணர் சேவக : துணரையணிந்த சேவக. சேவகன் : வீரன். 'சேவகனாகித் திண்சிலை ஏந்தி' (திருவாசகம் : 2,81).

### 7

துன்னார் : பகைவர். ஊழிக்கால் : பிரளயகாலத்துக் கடுங்காற்று. சினத்தீ : இரு பெயரொட்டுப் பண்புத் தொகை. உருவகம். ஒன்னார் : பகைவர். ஒடிமரம் : ஒடிக்கப்பட்ட மரம்; மர்க்கடம் : குரங்கு. 'வாதமாமகன் மர்க்கடம் ... (பெரிய திருமொழி : 5,8,2). மறலி : யமன். மகுடம் : கிரீடம். அரக்கன் : இராவணன். பார்த்திபர் : அரசர்கள்.

### 8

கவிக்கரசன் : சுக்ரீவன். மதுவனம் அழித்த வரலாற்றினை இராமாயணத்திற் காண்க.

தாயைப்பெற்ற கண் : தாயைக்கண்டால் சேய் கண்ணில் தோன்றும் மகிழ்ச்சி. தாய் அஞ்சனையாதலின் அஞ்சனம் தீட்டிய கண் என்னும் குறிப்பும் காண்க. 'இவன் பிறருக்கு அறிவுரைப்பான் என்று யாவரும் எண்ணியிருக்க, இவனே மதுவனத்தை அழிக்கத் தொடங்கினான்' என்றார். மூலம் : வேர்.

ததிமுகன் : மதுவனம் காத்தவன். மாது : சீதேவி, மறு : குற்றம். பேறன் : பேற்றினையுடையான்.

9

அஞ்சனவண்ணன் : இராமபிரான். அம்மை : சீதாப் பிராட்டியார். அண்ணால் : விளி. 'லகர வீற்ற விரவுப் பெயர்க்கண் ஈற்றயல் நீண்டது'. (நன். 312) பஞ்ச முகம் : ஐந்து முகம். பாலன் : காப்போன்.

10

பவக்கடல் : பிறவிப் பெருங்கடல். தயக்கம் : தாமதம்.

## V. முத்தப்பருவம்

பாட்டுடைத் தலைவனான குழந்தையை முத்தந் தருமாறு தாயர் வேண்டல் கூறும் பருவம்.

1

புணரி : கடல். கொண்டல் : மேகம். துணர் : பூங் கொத்து. தொடு : ஆகாயத்தைத் தொடுமளவு ஓங்கி யுயர்ந்த. வேய் : மூங்கில். தொடு கடல் : தோண்டப்பட்ட கடல்; இது கீழைச் சமுத்திரம். ஆ : பசு. மணம் : வாசனை. பங்கயம் : தாமரை. கனிவாய் முத்தம் : கனியின் சுவை யுடைய வாயால் தரும் முத்தம்; அன்றி, கனிவாயை வினையெச்சமாக்கிக் 'கனிவாய்த் தருக' எனலுமாம்.

2

குடை : தோண்டுகின்ற. வராகம் : பன்றி. மருப்பு : கொம்பு. கதலி : வாழை. கந்தரம் : கழுத்து. சாலி : நெல். மதி : சந்திரன்.

3

மடு : ஆற்றிற் பள்ளம். இடங்கர் : முதலைவகை. கொடுந்தாண் முதலையும் இடங்கரும் கராமும்' (குறிஞ்சிப். 257). கடுக்கை : கொன்றை. ஆரம் : சந்தனம். அருவாய்; (பெறற்கு) அரியவாய்.

4

மூவா : மூப்பினை என்றும் அடையாத. அமரர் பதிக் கிறைவன் : இந்திரன். அளகைக் கோமான் : குபேரன். மாயோன் ; மகாவிஷ்ணு.

5

ஆராத : அடங்காத. நீர் : புண்ணிய தீர்த்தம். ஒருத் தன் : ஒப்பற்றவன். விடுக்கிய : நீங்காது தங்கிய.

6

படுதல் : அனுபவித்தல். பருவரல் : துயரம். வாளா : சும்மா. கழல் : சிலம்பு; இது காலுக்கு ஆகுபெயர். சுயம் பிரபை வரலாறு இராமாயணம் கிஷ்கிந்தா காண்டத்தில் உள்ளது. சுயம்பிரபை என்பாள் ஒரு பிலத்தை, இந்திரன் சாபத்தால் காத்திருந்தாள்: அப்பிலத்திற்புகுந்த அநுமா னது அருளால் அவள் சாப நீங்கிச் சுவர்க்கமடைந்தாள் என்பது கதை. சுயம்பிரபையின் பிலம் பிளவுபட்டு அவள் வெளிப்படும் பொருட்டு அநுமான் பேருருவம் எடுத்துப் பிலத்தை உடைத்து மறுபடியும் பழைய உருவையடைந் தனனாதலால் 'பழைய உருப்பெற நின்றாய்' என்றார். (கம்பரா, : கிஷ்கிந்தா காண்டம் — பிலநீங்கு படலம்)

7

வரை : மலை. பரிய : பருத்த. வன்பு : வன்மை. சுரசை : இவள் அரக்கி உருவில், அநுமான் இலங்கைக்குப்போகும் வழியில், ஆகாயம் அளாவ நின்று அவனைத்தடுத்தனள். அவன் அவள் வாயிற்புகுந்து உடலைக் கிழிக்கத் தொடங் குகையில் தன் உண்மையுருக்காட்டி அவனை வாழ்த்தி மறைந்தனள்.

8

இலங்கணி : இலங்கையைக்காக்க நியமித்த அரக்கி. அவளை அநுமான் அறைந்து கொன்றனன். வாடு : வாட்டம். கரவின் : ஒருவருமறியாமல். பரவும் முத்தம் : இன்பம் பரவுதற்குக் காரணமான முத்தம்.

9

முதலிரண்டடிகளில் அநுமனின் தாயான அஞ்சனை அவற்குச் செய்யும் அரும்பணியைக் கூறுமாறு காண்க. அஞ்சனையின் குரலும் வடிவும் குயிலின் குரலையும் மயிலின் வடிவையும் நிரலே ஒக்கும்; இவளது திருவின் சிறப்பைக்கண்டு அவை முறியும் (தோற்கும்) என்றார். அவள் நித்திரை, ஊண், சோம்பல் முதலியவற்றைத் துறந்து அவன்பால் அருள் சொரிவது கூறிற்று.

குலிசப்படை : வச்சிராயுதம். பதி : இந்திரலோகம்

10

கதிர் : சூரியன். நறவு : தேன்.

## VI. வாரானைப்பருவம்

இதனை வருகைப்பருவம் என்றும் கூறுப. இது குழந்தையைத் தாயார் 'நடையின்று வருக' என்று அன்புடன் அழைக்கும் பருவம்.

1

அரிக்குரல் : சிலம்பின் உள்ளீடான அரி இடும் ஒலி. வம்பர் : புதிதாக. வடித்த : செய்யப்பெற்ற. ஞாண் : அரையிலணியும் நாண். இம்பர் : இங்குள்ளோர். 'இம்பரிவ்வுலகமொப்பாய்' (சிந்தா. 1737).

2

அடிபெயர்த்தொறும் : அடிபெயர்த்து வைக்கும் போதெல்லாம். பதுமரேகை : ஒருவனது நல்லூழினைக் குறிப்பதாகக் கருதப்படும் தாமரைவடிவமான கோடு. அம் கணைக்கால் : அழகிய கணுக்கால். துங்க : பரிசுத்தமான. தொடுகுழை : காதில் தொளையிட்டு அணியப்படும் ஆபரணவகை. சார் : அழகிய.

3

வாடாத்தவம் : தவத்தால் வாடாத என்க.

4

தசமுகன் : இராவணன். தேவி : சீதாதேவி. இடம் : இடத்தில். ஆழி : கணையாழி.

5

காசினி : புவி. மடல் : இதழ். மடி : சோம்பல். தரு: பயிர்களுக்குப் பொதுப் பெயர். 'சூரிய சந்திரர் இரு வருடைய பண்பும் நின்னிடம் உள்ளன' என்றவாறு.

6

பாவைகள் பதியின்றி ஆடுமோ? 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' என்ற தேவாரங்காண்க : பூவை : நாகண வாய்ப்புள். பளகு : குற்றம். மாணி : பிரமசாரி.

7

உடன் பிறந்தான் : பரதனுக்கு இராமன். தடம் : அகன்ற. தண்டகக்கான் : தண்டகாரண்யம். இராமபிரான் குறித்த நாளில் வாரானோ என்று அஞ்சித் தீயிற்புக எத் தனித்த பரதனை, இராமன் வரவு கூறித்தடுத்த அநுமான் செய்கையைக் கூறிற்று.

8

படை : படைக்கப்பட்ட. எல்லாவுயிரும் ஒடுங்கிவிட்ட போதும் சிரஞ்சீவியாய் வாழ்பவன் என்றவாறு. எல்லா மும் அல்லதுமாய் இருந்தபடி இருந்து காட்டும் : இதனைப் பரஞ்சோதியார் திருவிளையாடற் புராணம், தட்சிணாமூர்த்தி துதியில் வரும் 'எல்லாமாயல்லதுமா யிருந்தனையிருந்தபடியிருந்து காட்டிச், சொல்லாமற் சொன்னவரை...' என்னும் அடிகளோடு ஒப்பிடுக.

9

கல் ஆரும் : கல் போலத் திண்மை பொருந்திய. அதர்: வழி. மல் : மற்போர். பொல்லாத : அழகற்றவை. சமரம்: சண்டை. வழித்துணை : மார்க்க சகாயம் என்பர் வட மொழியில்.

10

இப்பாடலில் நடைபயின்றுவரும் அநுமனான குழந் தையை வரவேற்கப் பந்தலிட்டு, மணல் பரப்பி, தோர ணங்கட்டி ஏற்பாடுகள் செய்து வைத்துள்ளமையைக் கூறுகின்றார். கூந்தல் : விசேட காலங்களில் வாயிலை அலங்கரிக்கும் குருத்தோலைத் தோரணம்.

## VII. அம்புலிப்பருவம்

இதில் பாட்டுடைத் தலைவனோடு சந்திரனை விளை யாட அழைப்பது மரபு. அவ்வாறு அழைக்கும்போது சாம, பேத, தான, தண்டம் என்னும் நால்வகை உபாயங்களும் மேற்கொள்ளப்பெறும்.

1

இப்பாடலில் சந்திரனுக்கும் அநுமானுக்குமுள்ள பொருத்தங்கள் கூறுகின்றார்.

சந்திரன் மாயவனான விஷ்ணுவை அடுத்த நின்றது திருப்பாற்கடல் கடைந்த ஞான்று. மாநிலத்து மக்கள் அவனை வணங்குகின்றனர். அவன் கல்விமான். அவன் வான வீதியில் சஞ்சரிக்கின்றான். சோலைகளில் அவன் நிலவு வீசுகின்றது. அநுமான் மகா விஷ்ணுவின் அவதார மான இராமனை அடுத்திருப்பவன். மக்கள் அவனைப் பூசிக்கின்றனர். அவன் பல கலைகளும் கற்றவன். அவன் ஆகாய மார்க்கமாகச் (இலங்கைக்குச்) சென்றவன். அவன் சீதையைத் தேடச் சென்ற போதும் திரும்பிய போதும் பல சோலைகளிற் புகுந்து சென்றவன்.

துளப : துளவம், துளசி. அம்புலி : சந்திரனுக்கு ஒரு பெயர்.

2

இதிலும் ஒப்புமையே கூறப்படுகின்றது.

முனிபுங்கவர் : முனிசிரேஷ்டர். ஒருவுதல் : நீங்குதல். ஒருவியிட : 'இட' அசை. சந்திரன் பிரஹஸ்பதியின் மனைவியான தாரையைப் புணர்ந்து சாபமெய்தினன்; எல்லா ஊர்கள் மீது சுற்றி வருபவன். ஐம்புலன்களை யடக்கியோர்க்கு நற்கதியளிப்பான். எங்கும் இருளை மாற்றுபவன். அநுமான் தன் பலம் தனக்குத் தெரியா திருக்கும்படி இருடி சாபம் எய்தியவன்; பிறகு அதற்கு நீக்கம் கண்டவன். உபாசிப்பவர்களது நிவேதனங்களைப் பெறுபவன். பூசிப்பவர்க்கு நன்மை செய்பவன். அஞ்ஞான இருளைப் போக்குபவன்.

3

இதில் வேற்றுமை கூறப்படுகின்றது.

பாகு : இளக்க காய்ச்சிய வெல்லம். மாதர் மொழிக்கு அத்துணை இனிப்பு என்றார். திருமணம் ஆகாத

10

நதி : சிவபெருமான் தலையிலுள்ள கங்கை. அறுகு : அறுகம்புல். நளிதல் : நெருங்கியிருத்தல்; 'நளிந்து பலர் வழங்காச் செப்பம் துணியின்' (மலைபடு. : 197). நடை அதிரும்; நினைவு அமரினது; உள்ளம் கொலையின் பால்; மனம் புலையினது. புலை : அசுத்தமானது. உடல் கருகுவது; செறிவது படை. இவை இராவணனுக்குக் கூறப்பட்டவை. தசமுகன் : இராவணன். கொளு : கொள்கை. மூன்றாம் அடியில் சந்திரன் பல சீர்மைகளை யும் இழந்து நின்றவாற்றினைக் கூறுகின்றார். அவன் 'பதி, நிலைமை, கூறப்படும் பொருள், பண்பு, அதன் அறிகுறிகள், கோட்பாடுகள், அறிவு, இவற்றையெல்லாம் அரிதாக்கி, சீர்மை பெருமை ஆகியவற்றையும் இழந்து பெருங்கேடு உற்றனன்' என்று கூறுகின்றார்.

## VIII. சிற்றிற்பருவம்

இது சிறு பெண்கள் சிற்றில் இழைத்து விளையாடப் புக்குழி, பாட்டுடைத்தலைவன் (அவனும் குழந்தைப் பருவத்தினனாதலின்) அச்சிற்றில்களை உதைத்துத்தகர்ப் பதாகவும் அவ்வாறு செய்யேல் என்று அவர்கள் அவனை வேண்டுவது போலவும் கற்பித்துக் கொண்டு இயற்றப் படுவது.

1

வண்ணம் : தோற்றப் பொலிவு; Complexion. தாள் : பாதம். துகள் : தூசி. 'தாயர்கள் நீராட்டுதல் முதலியன செய்து அப்பெண்களை விளையாடவிட்டனர்; இவன் வந்து சிற்றிலையழித்தால் அவையெல்லாம் கெடும்' என்றவாறு. தளிர் அடி என்பதில் சிற்றில் சிதை படுத லோடு அவ்வடியும் நோவும் என்னும் குறிப்பும் காண்க.

2

தொகை : கூட்டம். இலம் : இல்லம். ஊழ் : விதி; கட்டடவிதி. தாழ்உற : குனிந்து; உன் பெருமைக்கு ஊறு வரும்படி எனலுமாம்.

3

*சீறடி* : சிறிய அடி; நிலைமொழியில் முதல் நீண்டு ஈறு கெட்டது. மேனி : அழகு; அழகிற் சிறந்த பெருந்தாயரும். பெருவேனில் : மிகுந்த வனப்பு. நாங்கள் அழகு பெறச் செய்த சிற்றில்கள் நிலைதவறிப்போம். வேனில் : அழகு. கருமேனிப் பெருமான் : ஈண்டு இந்திரபுரியிலுள்ள கரியமேனியுடைய வரதராசப் பெருமாள். இங்கு இராமன் என்ற அளவில் நின்றது. பிறை : பூர்ணசந்திரன் என்னும் அளவிற்று. பீடு : பெருமை. கழல் பூண்ட கால் என்க.

4

விகாரம் : வேறுபாடு. வண்ண : நிறங்கள் பல கொண்ட. பேய் ஆர்தல் : பேய் உறைதல்; being haunted. கடைசி நான்கு சீர்கள் முற்றுமோனை.

5

திரி தந்து : திரிந்து. தா : துணைவினை. மழ : இளமை குறிக்கும். 'நடந்ததன்ன' என்பது குறுகிற்று.

6

கோடாமல் : ஒருபாற் சாயாமல். காகுத்தன் : இராமபிரான்; ககுத்ஸ்த வமிசத்தில் பிறந்த இராமன் காகுத்தன். பொய் வீடு : விளையாட்டு வீடாதலின், நண்ணார் : பகைவர், நடு : நியாயம்; நேர்மை,

## 7

நண்ணாத : விரும்பாத. கண் : கண்ணோட்டம்; தாட்சண்யம். பரல் : சிலம்பில் உள்ளீடாக இடப்பட்டிருக்கும் கற்கள். பண் ; பண்ணப்படுவது. Creativity (ஆக்க முயற்சி) எனலுமாம்.

## 8

ஒழுகுதல் கூறியதற்கேற்ப 'மோண்டு' என்றார். புழங்கு ; பயிற்சியில் இருக்கும்; நடமாடும். புரை : குற்றம். திட்டி : திருஷ்டி.

## 9

இப்பாடல் முதலிரண்டடிகளில் சீதாப்பிராட்டியாருக்கு இராவணன் பிடியினின்றும் சுக்ரீவன் மனையாளுக்கு வாலியின் பிடியினின்றும் விடுதலை பெற்றுத் தந்தமை கூறப்படுகின்றது. மலர் வாழ் திருமாமகள் : இலக்குமி; ஈண்டு சீதாப்பிராட்டியார். திருமால் என்றது ஈண்டு இராமனை. அவற்கு உறுதுணை சுக்ரீவன். அலகு: அளவு. கவியரசன் : குரங்கு மன்னன். வீடு : விடுதலை. 'யாவரையும் காக்கும் நீயே கலகம் விளைத்தால் அதற்கு வரையறை உண்டோ?' என்றனர். கடிது ஏகாய் : சீக்கிரமாகச் சென்று விடு. திலகன் : சிறந்தவன். 'திலக நீண் முடித்தேவரும்' (சிந்தா. 246) 'எம் சிற்றிலைச் சிதைத்தால் நின் திருவடிக்கு உள்ள நலன் கெடும்' என்றனர்.

## 10

மலைதல் : போரிடுதல். பவனன் : வாயு தேவன். 'அவன் அலையும் இயல்புடையன்; அவன் செய்வது இயற்கை. நீ ஏன் செய்ய வேண்டும்?' என்னும் வினாவில் வாயுபுத்ரன் என்பதைச் சிறிது நினைவூட்டிற்று வரம்பே : விளி.

## IX. சிறுபறைப் பருவம்

இதில் பாட்டுடைத் தலைவனான குழந்தை சிறுபறை முழக்குதல் கூறப்படும்.

1

கார் : மேகம். படர்சடைக் கடவுள் : நடராஜப் பெருமான். ஆட்டு : நடனம்.

2

ஏத்துதல் : போற்றுதல். மரமாங்குயில் : மாமரக்குயில் என்று மாறுக. நல்லார் : மகளிர். பொன் : பொன்னி, காவிரி; அதன் வளம் பெறுபுரி திருஇந்திரபுரி; அதிலுள்ள குழலார் என்க. குழலார் : குழல்வாசிப்போர். ஏர் : அழகு.

3

பருகும் : பாலைப்பருகும். 'அவ்வழகு பருகலாம் போலும்' எனலுமாம். மிழற்று : பேச்சு. பெற்றவர் : தாய் தந்தையர். விரகியர் : விரகதாபத்தால் வருந்துவோர். யார் உறங்கினும் தான் உறங்காது அரற்றி அலையும் தன்மை பெருங்கடலுக்கும் விரகியர்க்கும் பொது.

4

தமிழ், வடமொழி இரண்டும் கைவந்தவன் அநுமான் என்பதைப் பிறாண்டும் கூறினார். அங்கை : அகங்கை; கையின் உட்புறம்; palm.

5

அண்டம் : உலகம். கொண்டல் : மேகம். உடு : விண்மீன். கயம் : யானை. நுதி : நுனி. அண்டர் : பகைவர்; அவர்களை அடக்கும் நாயகன்.

6

விம்மின் : வருக. முரசம் : இது தானமுரசம். தெம் முனை : தெவ் + முனை: தெவ் — பகை; பகைப்புலம். திரு இந்திரபுரி காவிரி நாட்டதாதலின் சோழன் கூறினார். தம்மின் : தம்மினும் சிறந்தவன் என்று ஒரு சொற் பெய்து முடிக்க. தராதலம் : பூமி. கொம்மென: 'கொம்' ஓர் ஒலிக் குறிப்பு. இது நாணொலியைக்குறிக்கும். 'கூரநாண்குரல் கொம்மென வொலிப்ப' (பரிபாடல் 19, 44).

7

புரியது : 'அது' பகுதிப்பொருள் விகுதி. வரதன் : வரந்தருவோன். சிவபெருமான், மகாவிஷ்ணு இருவருக்கும் இப்பெயர் உண்டு. வேலவன் : முருகன். பணி : பாம்பு. சடையன் : சிவபெருமான். பருப்பத மங்கை : பார்வதி. ஆர்கலி : கடல் சூழ்ந்த புவிக்கு ஆகுபெயர். வரதன் : இந்திரபுரியில் எழுந்தருளியுள்ள வரதராசப் பெருமாள்.

8

கான் : காடு. வான் : பெரிய; கடைமொழியால் ஆண் மயிலைக் குறித்தது. மஞ்ஞை : மயில். அசோகம் : சீதை சிறையிருந்த வனம். கடையில் : இறுதியில்.

9

தானவர் : அசுரர். தேவர் வேண்டிய அமுது பாற் கடலில் தோன்றியது. அநுமான் அதில் தோன்றாத அமுது. தோளாமணி : தொளையிடாத மணி. மானவர் : மானுடர். மகிதலம் : பூமி. குதிகொள : நடனமாட.

10

நிகர்தரல் : ஒப்பாதல்; தர — துணைவினை. இசல் தரும் ஐம்புலன் : தவத்திற்குப் பகையானை ஐம்புலன் கள். அறுசுவை உண்டி : நிவேதனம்.

## X. சிறுதேர்ப்பருவம்

1

இப்பாடல் முதல் மூன்று அடிகளில் பெருமுயற் சியால் பெறக் கூடாத பலன் இல்லை என்பதை விளக்கு கின்றார். காயாத மரங்கள் உளவேனும் அவற்றை சிரத் தையோடு (கருணையோடு) கவனித்தால் அவை கனிகள் பழுத்து நன்கு குலுங்கும்; பலன் வாய்க்காத (தராத) நிலங்களும் உண்டு; அவற்றிற்கு நீரணை வாயிலாகப்பாடு பட்டு நீர் பாய்ச்சினால் அவை வளம் பெற்றுப் பலன் தரும். அவ்வாறே நம்வழிப்படாத காரியங்களும் உண்டு. அவற்றைச் சலிப்பில்லாமல் மேற்கொண்டால், ஊக்கத் தோடும் அறிவோடும் பாடுபட்டால் அவையும் கைகூடும். முயற்சி திருவினையாக்கும் என்னும் உண்மை விவரிக்கப் பெற்றது. வாயாத : வாய்க்காத. சயம் : வெற்றி.

2

பால் : ஊழ். வாடு : வாட்டம். வாலறிவு : மெய் யறிவு. வான்மை வெண்மை, தூய்மை, மெய்ம்மை ஆகிய வற்றைக் குறிக்கும். '...வாலறிவன் நற்றாள் தொழா அரெனின்' (குறள். 2)

3

திரிசமன் : குறும்பு. பேச்சுவழக்குச் சொல். அமர் வென்றவன் காகுத்தன்; துயர்க்கடலின் கரை கண்டனன்

இராவணன்; அன்றி இராமன் என்னுமாம். கரை காண் டற்கு இருவேறு பொருள் காண்க. வென்று : வினை யெச்சம் காரணப்பொருட்டு. கண்மணியும் அனையநீ : கண்மணி அனைய நீயும்.

4

ஒருவாத : நீங்காத, தப்பாத. குவலயம் : உலகம். கொடைமடம் : பாரி முல்லைக்குத் தேர் ஈந்தது போன்ற கொடை. தனிப்படர் : மிகுந்த துன்பம். தவிப்பேன் : வினையாலணையும் பெயர்.

5

நாகத்து அணை : ஆதிசேடனாகிய படுக்கை. மாய வன் : மகாவிஷ்ணு. அளிக்க : புத்ரனில்லாத துயரினின் றும் காப்பாற்ற. இளையன் : அநுமானுக்கு இளைய பெருமாள் என்பது ஒரு பெயர்.

6

குயில் மாமரத்தின் மீதிருந்து பாடும்.

'மாமரக்கிளை தன்னின் மகிழ்ந்துவாழ
கோமளக் குயிலே யிசை கூவுவாய்' (குயில் : 1)

காமனுக்குத் தேர் தென்றல்.

7

ஓகை : உவகை. 'ஓகை எழுந்து குடிகொள்ள' என்று மாறுக. அவி : யாகத்திலிடும் அவிசின் புகை. கொண்டல் : மேகம். ஏர்வரை : அழகின் எல்லை.

## 8

ஆணவம் : அகம்பாவம். கொலையாதி பாதகங்கள் : ஐம்பெரும் பாவங்கள் — கொலை, பொய், களவு, கள்ளுண்டல், குருத்துரோகம் என்பன. திருவரை : செல்வத்தின் எல்லை. வரை : மலையெனலுமாம், கவியாதலின். இதனை மேற்பாடலுக்கும் கொள்க.

## 9

மனமாகிய புனம் என்று உருவகம். திருநாமம் : திரு ஐந்தெழுத்து முதலியவை. இது தொடர் உருவகம். இப் பாடல் இந்நூற்கோர் அணிகலன் எனத் திகழ்கின்றது. இது அநுமானை வந்தித்தலான் வரும் பயனோடு இந் நூலை ஓதுதற் பயனையும் உடன் கூறிற்று.

## 10

ஆ : பசு. கோ : மன்னன். குவலயம் : உலகு. பொலன்: பொலம், பொன். 'பொலம்பூண் வேந்தர்' (பதிற்று. 64). இதில், அறுமுறை வாழ்த்தில் மழை நீங்கலாகப் பிற வற்றையும், வேதம், ஆகமம், தர்ம சாத்திரம், கோவிந்தன் முதலியவற்றையும் இணைத்துப் பாடினார்.

## அருஞ்சொல் அகராதி

அங்கை : அகம் கை, கையின் உட்புறம்
அஞ்செவி : உள் காது
அடல் : போரிடுதல்
அண்டம் : முட்டை வடிவானது, உலகம்
அணை : படுக்கை
அதர் : வழி
அரு : கன்னம்
அமரர் : தேவர்
அலகு : அளவு
அவுணர் : அசுரர்

ஆர்கலி : கடல்
ஆரம் : சந்தனம்

இடங்கர் : முதலைவகை
இம்பர் : இங்குள்ளோர்
இரும் : பெரிய
இவர்தல் : ஏறுதல்
இழுது : வெண்ணெய்

உரகம் : பாம்பு

ஏர் : அழகு

ஒல் : பொருந்து

கடிது : விரைவு
கடுக்கை ; கொன்றை

கதலி : வாழை
கந்தரம் : கழுத்து
கரவு : பிறரறியாமை
கலாபம் : தோகை
கற்றெருமை : கன்றையுடைய எருமை
காசினி : புவி
கால் : காற்று
கான்முளை : மகன்

குணதிசை : கிழக்கு
குரிசில் : பெருமையிற் சிறந்தவன்
குலிசம் : வச்சிராயுதம்
குவலயம் : உலகம்
குழைதல் : தோண்டுதல்

கூந்தல் : வாயில் தோரணம்

கோடு : கொம்பு
கோடுதல் : சாய்தல்
கோலம் : அழகு

சமரசம்: சண்டை
சராசரம் : இயங்குபவை மற்றும்
நிலையானவை
சல்லியம் : மாயவித்தை
சலம் : வெகுளி
சாலி : நெல்

சீர்மை : அழகு, செல்வம்

சுதன் : மகன்
சுரும்பு : வண்டு

சூழியம் : உச்சிக்கொண்டை

செச்சை : ஆட்டுக்கடா

தமனியம் : பொன்
தாது : மகரந்தம்
தானவர் : அசுரர்

திட்டி : கண்ணீடு
திருகு : கள்ளத்தன்மை

துணர் : பூங்கொத்து
துன்னார் : பகைவர்

தொடையல் : மாலை

நளிதல் : நெருங்கியிருத்தல்
நறை : தேன்
நாலுதல் : தொங்குதல்

நின்மலம் : குற்றமற்றது

பகிரண்டம் : அண்டத்திற்கும் புறம்பான வெளி
படி : பூமி
பணம் : பாம்பின் படம்
பணி : பாம்பு
பணை : நிகரற்றது
பமரம் : வண்டு
பரம் : பாரம்
பரிபுரம் : சிலம்பு

பருவரல் : துன்பம்
பவம் : பிறப்பு
பவனன் : வாயுதேவன்
பழிச்சுதல் : வணங்கிப் போற்றுதல்
பளகு : குற்றம்
பனி : மஞ்சு
பார்த்திபன் : மன்னன்
பார்ப்பு : பறப்பவற்று இளமை
பார்வை : கண்ணீடு
பால் : ஊழ்
பாலன் : காப்போன்

பிடி : பெண் யானை

பீழை : துன்பம்

புணரி : கடல்
புரிதல் : விரும்புதல்
புரை : குற்றம்
புவனம் : புவி, உலகம்
புழங்கு : பயிற்சியில் இருக்கும்
புறகிடுதல் : பின் வாங்குதல்

பூத்த : ஆக்கிய
பூவை : நாகணவாய்ப்புள்

பெம்மான் : பெரியோன்
பொலன் : பொன்

மகபதி : இந்திரன்; யாகங்
களுக்குத் தலைவன்

மகம் : யாகம்
மகிதலம் : பூமி
மடி : சோம்பல்
மருப்பு : கொம்பு
மழ : இளமை
மறவி : யமன்
மாணி : பிரமசாரி
மானவர் : மனிதர்

மிழற்று : பேச்சு

முகில் : மேகம்

மூவா : மூப்பில்லாத

வம்பு : புதிது
வயின் : இடம்
வருக்கை : பலா
வளி : காற்று; வாயுதேவன்
வாணர் : வாழ்பவர்
வாமம் : அழகு

விச்சை : வித்தை
வித்தகன் : பேரறிவாளன்
விரை : வாசனை
விறல் : வெற்றி, வீரம்

வேய் : மூங்கில்

## பாட்டு முதற்குறிப்பு அகராதி

# பிழை திருத்தம்

| பக்கம் | பருவம் | பாடல் | அடி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|---|
| 29 | காப்பு | 5 | 3 | பிடியுற்றமரும் | பிடியுற்றுறலும் புடையுற்றமரும் |
| 32 | செங்கீரை | 5 | 2 | கருதிறம் | கருநிறம் |
| 34 | தால் | 3 | 3 | திரு இத்திர | திரு இந்திர |
| 35 | தால் | 5 | 1 | பல்வகை புனலும் | பல்வகைப் புனலும் |
| 43 | முத்தம் | 7 | 1 | கரிய உருவிப் | கரிய உருவில் |
| 50 | அம்புலி | 10 | 3 | புலையின் மனமும் | புலையின் மணமும் |
| 52 | சிற்றில் | 5 | 4 | நளின மலரடியால் | நளின மலர்ச் சீறடியால் |

